செய்பவர்களுக்கு திருமணம் கைகூடுதல், புத்திர பாக்கியம் உண்டாதல், வியாபாரத்தில் வெற்றி, அலுவலகத்தில் அமைதி, மனக்குழப்பங்கள் நீங்கி மனச் சாந்தி அடைதல் போன்றவைகள் மட்டுமல்லாமல் காக்கைவலிப்பு, புற்றுநோய் போன்ற தீராத நோய்களுக்கும் மருந்தாகப் பயன்படுவதால் இதற்கு "ஔஷத மந்திரம்" என்ற மற்றொரு பெயரும் உண்டு. ஔஷதம் என்றால் மருந்து. இந்த வேல் மாறல் மஹா மந்திரத்தை முருகப் பெருமானுக்கு உகந்த நாட்களான செவ்வாய்கிழமையிலும், கிருத்திகை நட்சத்திரத்திலும், வளர்பிறை சஷ்டி திதியிலும் பாராயணம் செய்வது மிகவும் உகந்தது. இதைக் கூட்டாகச் சேர்ந்து பாடவும் செய்யலாம், தனியாக பாராயணமும் செய்யலாம். திருத்தணியிர் உதிதத்ருளும் என்ற 4 வரிகளை க்ஷயளந எடிஉந (அனுதாத்தம்) கோரஸாகப் பாடலாம். மற்றவரிகளை (உதாந்தம்) டிஎந யெளந எடிஉந ல் பாடத் தெரிந்த ஒருவராகவோ அல்லது இருவராகவோ பாடி முடிக்கலாம்.

கால்மாறி ஆடும்இறை கால்முளையாம்
கந்தர்கைவேல் வகுப்பைக் கண்டு
நூல்மாறி வரத்தொகுத்து நோய்பிலிபேய்
சூன்யம் எலாம் நூற வேண்டி
வேல்மாறல் எனும்பேரால் வகுத்தருளி
வள்ளிமலை மேதை வள்ளல்
பால்மாறல் இன்றிஉத(வு) அரிய யந்த்ர
மந்தரஜபப் பயன்மிக் காமே

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப்
பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும்
நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணை அவன் பன்னிரு
தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங்
கோடன் மயூரமுமே





தடக்கொற்ற வேள்மயி லேஇடர்
தீரத் தனிவிடில்நீ
வடக்கிற் கிரிக்(கு)அப் புறத்தும்நின்
றோகையின் வட்டம்இட்டுக்
கடற்(கு)அப் புறத்தும் கதிர்க்(கு)அப்
புறத்தும் கனகசக்ரத்
திடர்க்(கு)அப் புறத்தும் திசைக்(கு)அப்
புறத்தும் திரிகுவையே

வேலும் மயிலும் சேவலும் துணை
என்று 6 முறை கூறவும்.

# வேல் மாறல் மஹா மந்திரம்

| | | |
|---|---|---|
| திருத்தணியில் | உதித்தருளும் | |
| ஒருத்தன்மலை | விருத்தன்என | |
| துளத்தில்உறை | கருத்தன்மயில் | |
| நடத்துகுஹன் | வேலே | –1 |

| | | |
|---|---|---|
| பருத்தமுலை | சிறுத்தஇடை | |
| வெளுத்தநகை | கறுத்தகுழல் | |
| சிவத்தஇதழ் | மறச்சிறுமி | |
| விழிக்குநிகர் | ஆகும் | –2 |

திருத்தணியில் 3 முறை

| | | |
|---|---|---|
| சொலற்கரிய | திருப்புகழை | |
| உரைத்தவரை | அடுதத்பகை | |
| அறுத்தெறிய | உறுக்கிஎழு | |
| அறத்தைநிலை | காணும் | –3 |

திருத்தணியில்







தருக்கிநமன் முருக்கவரின்
எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிகர் ஆகும் –4
திருத்தணியில்

பனைக்கைமுக படக்கரட
மதத்தவள கஜக்கடவுள்
பதத்துடும்நி களத்துமுளை
தெறிக்கவரம் ஆகும் –5
திருத்தணியில்

சினத்துஉணர் எதிர்த்தரண
களத்தில்வெகு குறைத்தலைகள்
சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்துலற மோதும் –6
திருத்தணியில்

துதிக்கும்அடி யவர்க்கொருவர்
கெடுக்கஇடர் நினைக்கின்அவர்
குலத்தைமுதல் அறக்களையும்
எனக்கோர்துணை ஆகும் –7
திருத்தணியில்

தலத்தில்உள கணத்தொகுதி
களிப்பின்உண வழைப்பதென
மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை ஆகும் –8
திருத்தணியில்

பழுத்தமுது தமிழ்ப்பலகை
இருக்கும்ஒரு கவிப்புலவன்
இசைக்குருகி வரைக்குஹையை
இடித்துவழி காணும் –9
திருத்தணியில்

திசைக்கிரியை முதற்குலிசன்
அறுத்தசிறை முளைத்ததென
முகட்டின்இடை பறக்கஅற
விசைத்அதிர ஓடும் –10
திருத்தணியில்

சுடர்ப்பரிதி ஒளிப்பநிலவு
ஒழுக்கும் மதி ஒளிப்பஅலை
அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும் –11
திருத்தணியில்

தனித்துவழி நடக்கும்
எனதிடத்தும் ஒருவலத்தும்
இருபுறத்தும் அருகு அடுத்து இரவு
பகற்றுணையது ஆதாகும் –12
திருத்தணியில்

பசித்தலகை முசித்தழுது
முறைப்படுதல் ஒழித்தஉணர்
உரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கஅருள் நேரும் – 13
திருத்தணியில்

திரைக்கடலை உடைத்துநிறை
புனற்கடிது குடித்துடையும்
உடைப்படைய அடைத்துதிரம்
நிறைத்துவிளை யாடும் – 14
திருத்தணியில்

சுராக்கும் முநிவரர்க்கும்
மகபதிக்கும் விதிதனக்கும்
ஹரிதனக்கும் நரர்தமக்கும்உறும்
இடுக்கண் வினைசாடும் –15
திருத்தணியில்

சலத்துவரும் அரக்கர்உடல்
கொழுத்துவளர் பெருத்தகுடர்
சிவத்ததொடை எனச்சிகையில்
விருப்பமொடு சூடும் –16
திருத்தணியில்

சுரர்க்கும் முனிவரர்க்கும்
மகபதிக்கும் விதிதனக்கும்
ஹரிதனக்கும் நரர்தமக்குஉறும்
இடுக்கண் வினைசாடும் – 17
திருத்தணியில்

சலத்துவரும் அரக்கர்உடல்
கொழுத்துவளர் பெருத்தகுடர்
சிவத்ததொடை எனச்சிகையில்
விருப்பமொடு சூடும் – 18
திருத்தணியில்

பசித்தலகை முசித்தழுது
முறைப்படுதல் ஒழித்தஉணர்
உரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கஅருள் நேரும் – 19
திருத்தணியில்

திரைக்கடலை உடைத்துநிறை
புனற்கடிது குடித்துடையும்
உடைப்படைய அடைத்துதிரம்
நிறைத்துவிளை யாடும் –20
திருத்தணியில்

சுடர்ப்பரிதி ஒளிப்பநிலவு
ஒழுக்கும் மதி ஒளிப்பஅலை
அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும் –21
திருத்தணியில்

தனித்துவழி நடக்கும்
எனதிடத்தும் ஒருவலத்தும்
இருபுறத்தும் அருகடுத்திரவு
பகற்றுணைய தாகும் –22
திருத்தணியில்

பழுத்தமுது தமிழ்ப்பலகை
இருக்கும்ஒரு கவிப்புலவன்
இசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும் –23
திருத்தணியில்

திசைக்கிரியை முதற்குலிசன்
அறுத்தசிறை முளைத்ததென
முகட்டின்இடை பறக்கஅற
விசைத்ததிர ஓடும் –24
திருத்தணியில்

துதிக்கும்அடி யவர்கொருவர்
கெடுக்கஇடர் நினைக்கின்அவர்
குலத்தைமுதல் அறக்களையும்
எனக்கோர்துணை ஆகும் –25
திருத்தணியில்

தலத்தில்உள கணத்தொகுதி
களிப்பின்உன வழைப்பதென
மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை ஆகும் –26
திருத்தணியில்

பனைக்கைமுக படக்கரட
மதத்தவள கஜக்கடவுள்
பதத்திடும்நி களத்துமுளை
தெறிக்கவரம் ஆகும் – 27
திருத்தணியில்

சினத்தஉணர் எதிர்த்தரண
களத்தில்வெகு குறைத்தலைகள்
சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும் – 28

திருத்தணியில்

சொலற்கரிய திருப்புகழை
உரைத்தவரை அடுத்தபகை
அறுத்தெரிய உறுக்கியெழும்
அறத்தைநிலை காணும் – 29

திருத்தணியில்

தருக்கிநமன் முருக்கவரின்
எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிகர் ஆகும் – 30

திருத்தணியில்

பருத்தமுலை சிறுத்தஇடை
வெளுத்தநகை கறுத்தகுழல்
சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிகர் ஆகும் – 31

திருத்தணியில்

திருத்தணியில் உதித்தருளும்
ஒருத்தன்மலை விருத்தன்என
துளத்தில்உறை கருத்தன்மயில்
நடத்துகுஹன் வேலே – 32

திருத்தணியில்

தருக்கிநமன் முருக்கவரின்
எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிகர் ஆகும் – 33

திருத்தணியில்

சொலற்கரிய திருப்புகழை
உரைத்தவரை அடுத்தபகை
அறுத்தெரிய உறுக்கியெழும்
அறத்தைநிலை காணும் – 34

திருத்தணியில்

திருத்தணியில் உதித்தருளும்
ஒருத்தன்மலை விருத்தன்என
துளத்தில்உறை கருத்தன்மயில்
நடத்துகுஹன் வேலே திருத்தணியில் (3 முறை)

பருத்தமுலை சிறுத்தஇடை
வெளுத்தநகை கறுத்தகுழல்
சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிகர் ஆகும் – 36

திருத்தணியில்

தலத்தில்உள கணத்தொகுதி
களிப்பின்உண வழைப்பதென
மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை ஆகும் – 37

திருத்தணியில்

துதிக்கும்அடி யவர்க்கொருவர்
கெடுக்கஇடர் நினைக்கின்அவர்
குலத்தைமுதல் அறக்களையும்
எனக்கோர்துணை ஆகும் – 38

திருத்தணியில்

சினத்தஉணர் எதிர்த்தரண
களத்தில்வெகு குறைத்தலைகள்
சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும் – 39

திருத்தணியில்

பனைக்கைமுக படக்கரட
மதத்தவள கஜக்கடவுள்
பதத்திடும்நி களத்துமுளை
தெறிக்கவரம் ஆகும் – 40
திருத்தணியில்

தனித்துவழி நடக்கும்
எனதிடத்தும் ஒருவலத்தும்
இரு புறத்தும் அருகடுத்திரவு
பகற்றுணைய ஆகும் – 41
திருத்தணியில்

சுடர்ப்பரிதி ஒளிப்பநிலவு
ஒழுக்குமதி ஒளிப்பஅலை
அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும் – 42
திருத்தணியில்

திசைக்கிரியை முதற்குலிசன்
அறுத்தசிறை முளைத்ததென
முகட்டின்இடை பறக்கஅற
விசைத்ததிர ஓடும் – 43
திருத்தணியில்

பழுத்தமுது தமிழ்ப்பலகை
இருக்கும்ஒரு கவிப்புலவன்
இசைக்குருகி வரைக்குஹையை
இடித்துவழி காணும் – 44
திருத்தணியில்

சலத்துவரும் அரக்கர்உடல்
கொழுத்துவளர் பெருத்தகுடர்
சிவத்ததொடை எனச்சிகையில்
விருப்பமொடு சூடும் – 45
திருத்தணியில்

ஸூரர்க்கும் முநிவரர்க்கும்
மகபதிக்கும் விதிதனக்கும்
ஹரிதனக்கும் நரர்தமக்கும்உறும்
இடுக்கண் வினைசாடும் – 46
திருத்தணியில்

திரைக்கடலை உடைத்துநிறை
புனற்கடிது குடித்துடையும்
உடைப்படைய அடைத்துதிரம்
நிறைத்துவிளை யாடும் – 47
திருத்தணியில்

பசித்தலகை முசித்தழுது
முறைப்படுதல் ஒழித்தஉணர்
உரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கஅருள் நேரும் – 48
திருத்தணியில்

திரைக்கடலை உடைத்துநிறை
புனற்கடிது குடித்துடையும்
உடைப்படைய அடைத்துதிரம்
நிறைத்துவிளை யாடும் – 49
திருத்தணியில்

பசித்தலகை முசித்தழுது
முறைப்படுதல் ஒழித்தஉணர்
உரத்துதிர நிணத்தசைகள்
புசிக்கஅருள் நேரும் –50
திருத்தணியில்

சலத்துவரும் அரக்கர்உடல்
கொழுத்துவளர் பெருத்தகுடர்
சிவத்ததொடை எனச்சிகையில்
விருப்பமொடு சூடும் – 51
திருத்தணியில்

ஸுரர்க்கும் முநிவரர்க்கும்
மகபதிக்கும் விதிதனக்கும்
ஹரிதனக்கும் நரர்தமக்கும்உறும்
இடுக்கண் வினைசாடும் – 52
திருத்தணியில்

திசைக்கிரியை முதற்குலிசன்
அறுத்தசிறை முளைத்ததென
முகட்டின்இடை பறக்கஅற
விசைத்ததிர ஓடும் – 53
திருத்தணியில்

பழுத்தமுது தமிழ்ப்பலகை
இருக்கும்ஒரு கவிப்புலவன்
இசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும் – 54
திருத்தணியில்

தனித்துவழி நடக்கும்
எனதிடத்தும் ஒருவலத்தும்
இருபுறத்தும் அருகு அடுத்து இரவு
பகற்றுணைய தாகும் – 55
திருத்தணியில்

சுடர்ப்பரிதி ஒளிப்பநிலவு
ஒழுக்குமதி ஒளிப்பஅலை
அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும் – 56
திருத்தணியில்

சினத்தஉணர் எதிர்த்தரண
களத்தில்வெகு குறைத்தலைகள்
சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும் – 57
திருத்தணியில்

பனைக்கைமுக படக்கரட
மதத்தவள கஜக்கடவுள்
பதத்திடும்நி களத்துமுளை
தெறிக்கவரம் ஆகும் – 58
திருத்தணியில்

தலத்தில்உள கணத்தொகுதி
களிப்பின்உண வழைப்பதென
மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை ஆகும் – 59
திருத்தணியில்

துதிக்கும்அடி யவர்க்கொருவர்
கெடுக்கஇடர் நினைக்கின்அவர்
குலத்தைமுதல் அறக்களையும்
எனக்கோர்துணை ஆகும் – 60
திருத்தணியில்

திருத்தணியில் உதித்தருளும்
ஒருத்தன்மலை விருத்தன்எனது
உளத்தில்உறை கருத்தன்மயில்
நடத்துகுஹன் வேலே – 61
திருத்தணியில்

பருத்தமுலை சிறுத்தஇடை
வெளுத்தநகை கறுத்தகுழல்
சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிகர் ஆகும் – 62
திருத்தணியில்

தருக்கிநமன் முருக்கவரின்
எருக்குமதி தரித்தமுடி
படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிகர் ஆகும் – 63
திருத்தணியில்

சொலற்கரிய திருப்புகழை
உரைத்தவரை அடுத்தபகை
அறுத்தெறிய உறுக்கிஎழும்
அறத்தைநிலை காணும் – 64

திருத்தணியில்

திருத்தணியில் உதித்தருளும்
ஒருத்தன்மலை விருத்தன்எனது
உளத்தில்உறை கருத்தன்மயில்
நடத்துகுஹன் வேலே திருத்தணியில் (3 முறை)

## முருகன் துதி

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

## பகைகடிதல்

திருவளர் சுடர் உருவே
சிவைகரம் அமர் உருவே
அருமறை புகழ் உருவே
அறவர்கள் தொழும் உருவே
இருள்தகும் ஒளியுருவே
எனநினை எனதெதிரே
குருகுகன் முதல்மயிலே
கொணர்தியுன் இறைவனையே. (1)

மறைபுகழ் இறைமுனரே
மறைமுதல் பகருருவே
பொறைமலி யுலகுருவே
புனநடை தருமுருவே

இறையுள முகவுருவே
　　எனநினை எனதெதிரே
குறைவறு திருமயிலே
　　கொணர்தியுன் இறைவனையே. 2

இதரர்கள் பலர்பொரவே
　　இவணுறை எனதெதிரே
மதிரவி பல வெனதோ்
　　வளர்சர ணிடையெனமா
சதுரொடு வருமயிலே
　　தடவரை அசைவுறவே
குதிதரும் ஒருமயிலே
　　கொணர்தியுன் இறைவனையே. 3

பவநடை மனுடர்முனே
　　படருறும் எனதெதிரே
நவமணி நுதலணியோ்
　　நகைபல மிடறணிமால்
சிவனிய திருமயிலே
　　திடனொடு நொடிவலமே
குவலயம் வருமயிலே
　　கொணர்தியுன் இறைவனையே 4

அழகுறு மலர் முகனே
　　அமரர்கள் பணிகுகனே
மழவுரு உடையவனே
　　மதிநனி பெரியவனே
இழவிஇலர் இறையவனே
　　எனநினை எனதெதிரே
குழகது மிளிர்மயிலே
　　கொணர்தியுன் இறைவனையே 5

இணையறும் அறுமுகனே
இதசசி மருமகனே
இணரணி புரள்புயனே
எனநினை எனதெதிரே
கணபண அரவுரமே
கலைவுற எழுதருமோர்
குணமுறு மணிமயிலே
கொணர்தியுன் இறைவனையே. 6

எளிய என் இறைவகுகா
எனநினை எனதெதிரே
வெளிநிகழ் திரள்களைமீன்
மிளிர்சினை யெனமிடைவான்
பளபள எனமினுமா
பலசிறை விரிதருநீள்
குளிர்மணி விழிமயிலே
கொணர்தியுன் இறைவனையே. 7

இலகயில் மயில்முருகா
எனநினை எனதெதிரே
பலபல களமணியே
பலபல பதமணியே
கலகல கலவெனமா
கவினொடு வருமயிலே
குலவிடு சிகைமயிலே
கொணர்தியுன் இறைவனையே. 8

இகலறு சிவகுமரா
எனநினை எனதெதிரே
சுகமுனி வரர்எழிலார்
சுரர்பலர் புகழ்செயவே



தொகுதொகு தொகுவெனவே
சுரநட மிடுமயிலே
குகபதிஅமர்மயிலே
கொணர்தியுன் இறைவனையே. 9

கருணைபெய் கனமுகிலே
கடமுனி பணிமுதலே
அருஅண்யன் அரனெனவே
அகநினை யெனதெதிரே
மருமலர் அணிபலவே
மருவிடு களமயிலே
குருபல வவிர்மயிலே
கொணர்தியுன் இறைவனையே. 10



முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே – ஒரு கை முகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கை தொழுவேன் நான்.

## குமாரஸ்தவம்

ஓம் ஷண்முக பதயே நமோ நம :

ஓம் ஷண்மத பதயே நமோ நம :
ஓம் ஷட்க்ரீவ பதயே நமோ நம :
ஓம் ஷட்க்ரீட பதயே நமோ நம :
ஓம் ஷட்கோன பதயே நமோ நம :
ஓம் ஷட்கோச பதயே நமோ நம :
ஓம் நவநிதி பதயே நமோ நம :
ஓம் சுபநிதி பதயே நமோ நம :
ஓம் நரபதி பதயே நமோ நம :
ஓம் ஸூரபதி பதயே நமோ நம :
ஓம் நடச்சிவ பதயே நமோ நம :
ஓம் ஷடக்ஷர பதயே நமோ நம :
ஓம் கவிராஜ பதயே நமோ நம :
ஓம் தபராஜ பதயே நமோ நம :
ஓம் இஹபர பதயே நமோ நம :
ஓம் புகழ்முநி பதயே நமோ நம :
ஓம் ஜயஜய பதயே நமோ நம :
ஓம் நயநய பதயே நமோ நம :
ஓம் மஞ்சுள பதயே நமோ நம :
ஓம் குஞ்சரீ பதயே நமோ நம :
ஓம் வல்லீ பதயே நமோ நம :
ஓம் மல்ல பதயே நமோ நம :
ஓம் அஸ்த்ர பதயே நமோ நம :
ஓம் சஸ்த்ர பதயே நமோ நம :
ஓம் ஷஷ்டி பதயே நமோ நம :
ஓம் இஷ்டி பதயே நமோ நம :
ஓம் அபேத பதயே நமோ நம :

ஓம் ஸுபோத பதயே நமோ நம :
ஓம் (வ்)வியூஹ பதயே நமோ நம :
ஓம் மயூர பதயே நமோ நம :
ஓம் பூத பதயே நமோ நம :
ஓம் வேத பதயே நமோ நம :
ஓம் புராண பதயே நமோ நம :
ஓம் (ப்) பிராண பதயே நமோ நம :
ஓம் பக்த பதயே நமோ நம :
ஓம் முக்த பதயே நமோ நம :
ஓம் அகார பதயே நமோ நம :
ஓம் உகார பதயே நமோ நம :
ஓம் மகார பதயே நமோ நம :
ஓம் விகாச பதயே நமோ நம :
ஓம் ஆதி பதயே நமோ நம :
ஓம் பூதி பதயே நமோ நம :
ஓம் அமார பதயே நமோ நம :
ஓம் குமார பதயே நமோ நம :



# முருகன் போற்றி வழிபாடு

ஓம் அப்பா போற்றி
ஓம் அரனே மகனே போற்றி
ஓம் அழகா போற்றி
ஓம் உருவே போற்றி
ஓம் அபயா போற்றி
ஓம் அதிகா போற்றி
ஓம் அறுபடையோய் போற்றி
ஓம் ஆறுமுகத்தரசே போற்றி
ஓம் ஆதி போற்றி – 10

ஓம் அனாதி போற்றி
ஓம் இச்சை போற்றி
ஓம் கிரியை போற்றி
ஓம் இறைவா போற்றி
ஓம் இளையோய் போற்றி
ஓம் ஈசா போற்றி
ஓம் நேசா போற்றி
ஓம் உத்தமா போற்றி
ஓம் உயிரே போற்றி
ஓம் உணர்வே போற்றி – 20

ஓம் உமைபாலா போற்றி
ஓம் எண்குணா போற்றி
ஓம் ஏகா போற்றி
ஓம் அனேகா போற்றி
ஓம் ஒலியே போற்றி
ஓம் சுடரொளியே போற்றி
ஓம் கந்தா போற்றி
ஓம் கடம்பா போற்றி
ஓம் கருணாமூர்த்தியே போற்றி – 30

ஓம் காவலா போற்றி
ஓம் கார்த்திகேயா போற்றி
ஓம் குகனே போற்றி
ஓம் குமரா போற்றி
ஓம் குறவா போற்றி
ஓம் குன்றுதோர் நின்றாய் போற்றி
ஓம் சரவணா போற்றி
ஓம் சண்முகா போற்றி
ஓம் சர்வலோகா போற்றி
ஓம் சத்தியசீலா போற்றி – 40

ஓம் சிட்டானே போற்றி
ஓம் சிவக்குமரா போற்றி
ஓம் சிவக்கொழுந்தே போற்றி
ஓம் சித்தி போற்றி
ஓம் முத்தி போற்றி
ஓம் தலைவா போற்றி
ஓம் தவப்புதல்வா போற்றி
ஓம் தணிகைமுருகா போற்றி
ஓம் சூரா போற்றி
ஓம் வீரா போற்றி – 50

ஓம் சுப்ரமண்யா போற்றி
ஓம் செந்தமிழா போற்றி
ஓம் செங்கல்வராயா போற்றி
ஓம் சேவலா போற்றி
ஓம் சேனாதிபதியே போற்றி
ஓம் ஞானபண்டிதா போற்றி
ஓம் தூயோய் போற்றி
ஓம் துறையே போற்றி
ஓம் நடுவா போற்றி
ஓம் நல்லோய் போற்றி – 60

ஓம் நாதா போற்றி
ஓம் போதா போற்றி
ஓம் நாவலா போற்றி
ஓம் பாவலா போற்றி
ஓம் நித்தியா போற்றி
ஓம் நிமலா போற்றி
ஓம் பொன்னே போற்றி
ஓம் பொருளே போற்றி
ஓம் புலவா போற்றி
ஓம் பூரணா போற்றி – 70

ஓம் மன்னா போற்றி
ஓம் மயிலோய் போற்றி
ஓம் மறையே போற்றி
ஓம் மணக்கோலா போற்றி
ஓம் மாசிலாய் போற்றி
ஓம் மால்முருகா போற்றி
ஓம் முருகா போற்றி
ஓம் முதல்வா போற்றி
ஓம் முத்தையா போற்றி
ஓம் மூவர்க்கும் மேலோய் போற்றி – 80

ஓம் வரதா போற்றி
ஓம் விரதா போற்றி
ஓம் விவேகா போற்றி
ஓம் வித்தகா போற்றி
ஓம் விசாகா போற்றி
ஓம் விதியே போற்றி
ஓம் கதியே போற்றி
ஓம் விண்ணோர் தொழும் விமலா போற்றி
ஓம் குஞ்சரிமணாளா போற்றி
ஓம் பரங்குன்றின் பரமா போற்றி – 90

ஓம் சூரனைமாய்த்தோய் போற்றி
ஓம் செந்தில் செவ்வேலா போற்றி
ஓம் ஆண்டியாய் நின்றாய் போற்றி
ஓம் ஆவினன் குடியோய் போற்றி
ஓம் ஏரகப் பெருமான் போற்றி
ஓம் எம்பிரான் குருவே போற்றி
ஓம் வள்ளி மணாளா போற்றி
ஓம் வளர் தணிகேசா போற்றி
ஓம் சோலையில் செல்வா போற்றி
ஓம் சுகமெலாம் தருவாய் போற்றி
ஓம் ஒழுக்கம் அருள்வாய் போற்றி
ஓம் உடல் நலம் தருவாய் போற்றி – (100)

ஓம் செறுக்கினை அறுப்பாய் போற்றி
ஓம் சினம்காமம் தவிர்ப்பாய் போற்றி
ஓம் அவாவினை அழிப்பாய் போற்றி
ஓம் அறம்பொருள் தருவாய் போற்றி
ஓம் அனைத்தும் நீயே போற்றி
ஓம் அருள்வாய் வள்ளி மணாளா போற்றி
ஓம் தேவசேனா சண்முகா
போற்றி போற்றி போற்றியே.

## திருப்புகழ்

ஏறுமயி லேறிவிளை யாடும்முகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவவேல் வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதிஅரு ணாசலம் அமர்ந்த பெருமாளே

## கற்பூர ஹாரத்தி

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோநம வெகுகோடி

நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம பரசூரர்

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ

தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்

ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவாத

ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜகெம்பீர நாடாளு நாயக வயலூரா

ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி கையிலேகி

ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே

வேலும் மயிலுந் துணை

# சத்ரு சங்கார வேற் பதிகம்

**காப்பு**

சண்முகக் கடவுள் போற்றி
சரவணத் துதித்தாய் போற்றி
கண்மணி முருகா போற்றி
கார்த்திகை பாலா போற்றி
தண்மலர்க் கடப்பமாலை
தாங்கிய தோளா போற்றி
விண்மதி வதன வள்ளி
வேலவா போற்றி போற்றி



**நூல்**

அப்பமுடன் அதிரசம் பொரிகடலை துவரைவடை அமுதுசெய் இபமுகவனும் ஆதி கேசவன் லட்சுமி திங்கள் தினகரன் ஐராவதம் வாழ்கவே ! முப்பத்து முக்கோடி வானவர்கள் இடர் தீர முழுது பொன்னுலகம் வாழ்க மூவரோடு கருட கந்தருவர் கிம்புருடரும் முது மறைக்கிழவர் வாழ்க செப்பரிய இந்திரன் தேவி அயிராணிதன் திரு மங்கலம் வாழ்கவே ! சித்தவித்யாதரர் கின்னரர்கள் கனமான தேவதைகள் முழுதும் வாழ்க

சப்த கலை விந்துக்கும் ஆதியாம் அதிரூப சரஹணனை நம்பினவர்மேல் தர்க்கமிட நாடினரைக் குத்தி எதிராடிவிடும் சத்ரு சங்கார வேலே – 1

சித்தி சுந்தரி கௌரி அம்பிகை க்ருபாநிதி சிதம்பரி சுதந்தரி பரசிற்பரி சுமங்கலி நிதம்பரி விடம்பரி சிலாசுத விலாச விமலி

கொகுத்து திரிசூலி திரிகோணத்தி ஷட்கோண குமரி கங்காளி ருத்ரி குலிச ஓம்காரி ரீம்காரிஆங்காரி ஊங் காரி ரீங்காரி அம்பா

முத்தி காந்தாமணி முக்குண துரந்தரி மூவர்க்கு முதல்வி ஞான முதுமறைக் கலைவாணி அற்புத புராதனி மூவுலகும் ஆன சோதி

சத்தி சங்கரி நீலி கமலி பார்வதி தரும் சரஹணனை நம்பினவர் மேல் தர்க்கமிட நாடினரைக் குத்திஎதிர் ஆடிவிடும் சத்ரு சங்கார வேலே – 2

மூரியுள முப்பத்து முக்கோடி தேவரும் முனிவரோடும் அசுரர்கூடி முழுமந்த்ர கிரி தன்னை மத்தாகவே செய்து முற்கணத்து அமுது பெறவே கோரமுள வாசுகியின் ஆயிரம் பருவாயில் கொப்பளித்திடு விடங்கள் கோளசையும் மண்டலங்கள் யாவையும் எரித்திடும் கொடிய அரவினைப்பிடித்து

வீரமுடன் வாயினாற் குத்தி உதிரம்பரவ இருதாளிலே மிதித்து விரித்துக் கொழும் சிறகு அடித்தே யெடுத்து உதறும் விதமான தோகை மயிலில் சாரியாய்த் தினம் ஏறி விளையாடி வரும்முருக சரஹணனை நம்பினவர் மேல் தர்க்கமிட நாடினரைக் குத்தி எதிர் ஆடிவிடும் சத்ரு சங்கார வேலே – 3

உக்கரமுள தாருகன் சிங்கமா சூரனும் உன்னுதற்கு அரிய சூரன் உத்தி கொளும் அக்னிமுகன் பானுகோபன் முதல் உத்தண்ட அசுரர் முடிகள்

நெக்குவிட கரிபுரவி தேர்கள் வெள்ளங்கோடி நெடிய பாசங்கள் கோடி நிறையிலா வஸ்திரம் வெகு கோடிகள் குருதி நீரிற் சுழன்று உலவவே

தொக்கு தொகு திதிதிமி டுண்டுடுடு டகு குடிகு துந்துமித குகுதி திகுதை தோததிமி டங்குகுகு டிங்கு குகு டிங்குகுகு சங்குகெனத் தொந்தக் கவந்தமாட

சக்கரமொடு சக்திவிடு தணிகை சென்னியில் வாழும் சரஹணனை நம்பினவர்மேல் தர்க்கமிட நாடினரைக் குத்தி எதிர் ஆடிவிடும் சத்ரு சங்கார வேலே – 4

அந்தியில் பேச்சிபுறு முனி காட்டேரி அடங்காத பகல் இரிசியும் அகோர கண்டம் கோர கண்ட சூன்யம்பில்லி அஷ்ட மோஹினி பூதமும்

சந்தியானவசுகுட்டிசாத்தி வேதாளமும் சாகினி இடாகினிகளும் சாமுண்டி பகவதி ரத்தக் காட்டேரி முதல் சஞ்சரித்திடு முனிகளும் சிந்தை நொந்து அலறித் திரு வெண்ணீறு காணவே தீயில் இடுமெழுகு போலத் தேகமெல்லாம் கருகி நீறாக வேநின்று சென்னி இருதணிகை மலையில்

சந்ததம் கலியாண சாயுஜ்ய பதம் அருளும் சரஹணனை நம்பினவர் மேல் தர்க்கமிட நாடினரைக் குத்திஎதிர் ஆடிவிடும் சத்ரு சங்கார வேலே – 5

கண்டவிட பித்தமும் வெப்புதலை வலி இருமல் காமாலை சூலை குஷ்டம் கண்ட மாலைத் தொடை வாழைவாய் புற்றினோடு கடினமாம் பெருவியாதி அண்டொணாதச் சுரஞ் சீத வாதச்சுரம் ஆறாத பிளவை குன்மம் அடங்காத இருபஃது மேமுடன் நால் உலகத்தில் எண்ணாயிரம் பேர்

கொண்டதொரு நோய்களும் வேல் என்று உரைத்திடக் கோவென்ன ஓலம் இட்டுக் குலவு தினகரன் முன் மஞ்சு போல் நீங்கிடும் குருபரன் நீறு அணிந்து.

சண்டமாருத காலஉத் தண்ட கெம்பீர சரஹணனை நம்பினவர் மேல் தர்க்கமிட நாடினரைக் குத்தி எதிர் ஆடிவிடும் சத்ரு சங்கார வேலே – 6

மகமேரு உதயகிரி அஸ்திகிரியும் சக்ரவாளகிரி நிடதவிந்தம் மாக்ரதர நரசிம்மகிரி அத்திகிரி மலைகளொடும் அதனை சுமவா ஜெகமெடுத் திடும்புட்ப தந்தம் அயிராவதம் சீர்ப் புண்டரீக குமுதம் செப்புசா ருப்பூ மஞ்சனம் சுப்பிர தீப வாமனம் ஆதி வாசுகி மகாபதுமன் ஆனந்த கார்க்கோடகன் சொற்சங்க பாலன் குளிகன் தூயதக்கன் பதும சேடனோடு அரவெலாம் துடித்துப்

பதைத்து அதிரவே தகததெென நடனமிடு மயிலேறி விளையாடும் சரஹணனை நம்பினவர் மேல் தர்க்கமிட நாடினரைக் குத்திஎதிர் ஆடிவிடும் சத்ரு சங்கார வேலே – 7

திங்கள் பிரமாதியரும் இந்திராதி தேவரும் தினகரரும் முனிவரொடு சித்திரா புத்திரர் மௌலி அகலாமல் இருபதம் சேவித்து நின்று தொழவும்

மங்கை திரு வாணியும் அயிராணியொடு சத்த மாதர் இருதாள் பணியவும் மகதேவர் செவிகூறப் பிரணவம் உரைத்திட மலர்ந்த செவ்வாய்கள் ஆறும் கொங்கை களபம் புனுகுசவ்வாது மணவள்ளி குமரி தெய்வா னையுடனே கோதண்டபாணியும் நான் முகனுமே புகழ் குலவு திருத் தணிகை மலைவாழ்

சங்கு சக்ர மணியும் பங்கயக்கரன் மருக குமர சரஹணனை நம்பினவர் மேல் தர்க்கமிட நாடினரைக் குத்திஎதிர் ஆடிவிடும் சத்ரு சங்கார வேலே – 8

மண்டலம் பதினாலு லோகம் அசைந்திட வாரிதி ஓர் ஏழும் வறள வலிய அசுரர் முடிகள் பொடிபடக் கிரவுஞ்ச மாஎழத் தூளி ஆகக் கொண்ட நிறம் எனும் அசுரர் அண்டங்கள் எங்குமே கூட்டமிட்டு ஏக அன்னோர் குடல் கைகாலுடன் மூளை தலைகள் வெவ்வேறாகக் குத்திப் பிளந்தெடுத்து

அண்டர்பணி கதிர்காமம் பழநி சுப்பிரமணியம் ஆவினன் குடி ஏரகம் அருணாசலம், கைலை தணிகைமலை மீதில்உறை ஆறுமுகப் பரம குருவாம்.

சண்டமாருதக் காலசம்மார அதிதீர சரஹணனை நம்பினவர்மேல் தர்க்கமிட நாடினரைக் குத்தி எதிர் ஆடிவிடும் சத்ரு சங்கார வேலே – 9

மச்சங் குதித்து நவமணி தழுவ வந்தநதி வையாபுரிப் பொய்கையும் மதியமுத் தம் செய்யும் பொற்கோபுரத்து ஒளியும் வான்மேவு கோயில் அழகும்

உச்சிதமதான திருஆவினன் குடியில் வாழ் உம்பரிட முடிநாயக உக்ரமயில் ஏறிவரு முருக சரவணபவ ஓங்கார சிற்சொரூபவேல்

அச்சுத க்ருபாகரன் ஆனைமுறை செய்யவே ஆழியை விடுத்து ஆனையை, அன்புடன் இரட்சித்த திருமால் முகுந்தன் எனும் அரிகிருஷ்ண ராமன் மருகன்

சச்சிதானந்த பரமானந்த சுரர்தந்த சரஹணனை நம்பினவர்மேல் தர்க்கமிட நாடினரைக் குத்திஎதிர் ஆடிவிடும் சத்ரு சங்கார வேலே – 10

## சத்ரு சங்கார வேல் பதிகம் - விளக்க உரை

(ரேவதி சங்கரன், சென்னை – இந்தியா)

1. . . . . . .பாடல் வரிகளுக்கு

இது மிகவும் சக்திவாய்ந்தது.

ஆச்சரியப்படத்தக்க முறையில் எல்லா தேவர்களையும் தெய்வங்களையும் முன்னிலைப்படுத்தி சரவணனது அடியார்களை எதிர்ப்போரை அடியோடு அழித்து இல்லாமல் செய்துவிடும் என்பதாகப் பொருள். எதிரிகள் என்பதை தீமை, வறுமை, நோய்கள் துயரங்கள் என்று கொள்வது சாலச்சிறந்தது!

பட்சணங்கள் அமுது செய்யும் வினாயகன் வாழ்க! திருமாலும் திருமகளும் வாழ்க! சந்திர சூரியரோடு அயிராவதம் எனும் தேவலோக யானையும் வாழ்க! முப்பத்து மூன்று கோடி வானவர்கள் உள்ள தேவலோகம் வாழ்க! பிரம்மா விஷ்ணு, மகேசன் ஆகிய மூவர் வாழ்க! கருடனும், கந்தர்வரும், முனிகளும் ரிஷிகளும் இந்திரனும் அவனது தேவி இந்திராணியும் வாழ்க! சித்தர்கள், வித்யாதரர்கள், இசைபாடி உலவும் கின்னரர்கள் இவர்களோடு மற்ற தேவதைகளும் வாழ்க! முருகனது அடியார்களை எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

2. . . . . . . பாடல் வரிகளுக்கு

முருகப்பிரானுக்கு ஞானமாகிய சக்தி வேலைத் தந்தவள்

அன்னை பார்வதி! அவளைப் பலப்பல பெயர்கள் சொல்லி வணங்குவர். இதில் அன்னையைப் போற்றும் இந்த நாமங்கள்தான் சக்திவாய்ந்தவை. இந்தப்பதிகத்தை ஓதுவதால் அன்னை அருள் கிட்டும். அவள் தந்த வேலின் சக்தி எத்தகையது! முருகனது அடியார்களை எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

3. . . . . . . பாடல் வரிகளுக்கு

முன்னொருகாலத்தில் அழியாத்தன்மை பெற தேவரும் அசுரரும் மந்தரமலையை மத்தாக்கி வாசுகி எனும் பாம்பினைக் கயிறாக்கிப் பாற்கடலைக் கடைந்தனர். அப்போது வலிபொறாத நாகத்தின் வாயினின்றும் கொடியவிடம் கொப்பளித்து பெருகி, கிரகங்கள் சுழலும் இந்த மண்டலத்தை எரிக்கலாயிற்று. அந்த ஆலகாலத்தை சிவன் அமுதுசெய்து கண்டத்தில் நிறுத்தி நீலகண்டன் ஆனார். அந்த அரவினைப் பிடித்து, தன் அலகினால் குத்தி, இருகால்களால் மிதித்துத் தன் சிறகுகளை விரித்து எடுத்து உதறும் வல்லமை பெற்றது முருகனது வாகனமாகிய மயில்! முருகனது அடியார்களை எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

4. . . . . . . பாடல் வரிகளுக்கு

அன்னை தந்த வேலும் வலியது! முருகன் ஏறும் மயிலும் வலியது! அந்த முருகனது வல்லமை சொல்லிமுடியுமோ? ஆணவம் – கன்மம் – மாயையின் உருவான தாருகன், சிங்கமுகன், சூரபதுமன், அக்னிமுகன், பானுகோபன் ஆகிய அசுரர்களையும் அவர்களது அரக்கர் படைகளையும் பொடிப்பொடியாக்கினான் முருகன். அசுரரது முடிகள் சிதற, ரத்தவெள்ளத்தில் யானை, குதிரைகள், தேர்கள், அசுரரது அஸ்திரங்களும் ஆடைகளும் சுழன்று ஓடுகிறதாகச் சொல்கிறார் சுவாமிகள்! கோபாவேசத்தோடு குமரன் சக்திவேலைச் சுழற்ற, குதித்தும் எகிறியும் தலையற்ற உடல்கள் [கவந்தம்] ஜதியோசைபோல் ஆடுவது பயங்கரமாக இருந்ததை காட்டும் வரிகள். முருகனது அடியார்களை எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

5\. . . . . . . பாடல் வரிகளுக்கு

முருகனது நெற்றியில் ஒளிவீசும் திரு வெண்ணீற்றினைக் கண்டதுமே தீய சக்திகள் என்று உலகத்தோர் அச்சப்படும் துர்த்தேவதைகள் எல்லாம் அனலில் இட்ட மெழுகுபோல் கருகிச் சாம்பலாகிவிடும். பேய்ச்சி, உறுமுனிக் காட்டேரி, இரிசி, அகோர கண்டம், கோரகண்ட சூனியம், பில்லி, மோஹினிப்பிசாசு, பூதம், குட்டிச்சாத்தான், வேதாளம், சாகினிகள், டாகினிகள், சாமுண்டி, பகவதி, ரத்தக்காட்டேரி, ஓடித் தொல்லைதரும் முனிகள் ஆகியவை இன்றும் கிராமப்புறங்களில் நடமாடுவதாகச் சொல்கின்றனர். இதற்கெல்லாம் முடிவு கட்ட கந்தன் திருநீறு அணிந்தால் போதும்! முருகனது அடியார்களை எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

6\. . . . . . . பாடல் வரிகளுக்கு

இந்தப்பதிகம் உலகில் உள்ள 8000 வகையான நோய்களைப் பட்டியல் இட்டு, அனைத்துக்கும் சஞ்சீவினி மருந்து முருகனது திருநீறு என்று காட்டுகிறது. பகைவருக்குச் சண்டமாருதமெனும் புயலாகவரும் முருகன் நோய்களைத் தீர்ப்பான் என்று காட்டும் பதிகம். முருகனது அடியார்களை எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

7\. . . . . . . பாடல் வரிகளுக்கு

மஹாமேரு, உதயகிரி, ஹஸ்திகிரி, சக்ரவாள மலை, நிஷாதம், விந்திய மலை, நரசிம்மகிரி, அத்திகிரி ஆகிய மலைகள் விளங்கும் இந்த உலகினை எட்டுத் திக்குகளிலும் அஷ்ட திக் கஜங்களான புஷ்பதந்தம், ஐராவதம், புண்டரீகம், குமுதம், சார்வபௌமம், சுப்ரதீபம், அஞ்சனம், வாமனம் ஆகிய எட்டு யானைகள் தாங்கி நிற்கின்றன. அதுபோல், அச்சுறுத்தக்கூடிய ஆதிசேடன், வாசுகி, மஹாபத்மன், கார்க்கோடகன், பாலகுளிகன், தக்கன், பதும சேஷன் போன்ற நாகங்களுமே, முருகன் ஏறிவரும் மயில் பறந்தாலே அஞ்சிநடுங்குமாம். அப்படியிருக்க அடியவர்களாகிய நமக்கு என்ன பயம்? முருகனது அடியார்களை

எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

8....... பாடல் வரிகளுக்கு

முருகனை யாரெல்லாம் வணங்குகிறார்கள் தெரியுமா? சந்திரன், பிரமன், இந்திரன், தேவர்கள், சூரியன், ரிஷிகள், பாவபுண்யக் கணக்கெழுதும் சித்திர குப்தன் – எல்லோரும் கரங்களை முடிமேல் குவித்து வணங்குகின்றனர். சரஸ்வதி, இந்திராணி, சப்தமாதர்கள், ஆகியோரும் வணங்குகின்றனர். தந்தைக்குப் பிரணவம் உரைத்த செவ்விதழ்களில் புன்னகையோடு அழகே உருவாக விளங்கும் முருகனது மேனியில், கந்தம், புனுகு, சவ்வாது ஆகிய வாசனைத் திரவியங்கள் பரிமளிக்க, வள்ளி தேவானையுடன் கூடி நின்ற அழகை விஷ்ணுவும் பிரமனும் புகழ்ந்து பாட, சங்கு சக்கரம் ஏந்திய கையன் திருமால் மருகன் சரவணனது அன்பர்களுக்கு வேலுண்டு வினையில்லை மயிலுண்டு பயமில்லை. முருகனது அடியார்களை எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

9....... பாடல் வரிகளுக்கு

ஈரேழு பதினான்கு உலகும் குலுங்கியது! ஏழு கடல்களும் வற்றின! அரக்கர் தலைகள் சுக்கு நூறாக நொறுங்கின! கிரௌஞ்ச மலையாய் நின்ற சூரபதுமன் உடல் பொடிப்பொடியானது! கற்களாகச் சிதறி முருகன் காலடியில் தூசியாக ஆனது! அறுந்த உடல்கள் அங்குமிங்கும் ஓடின! உடலின் பாகங்கள் சிதறின. சூரனை அழித்தபின் முருகன் வெற்றிவீரனாக கதிர்காமம், பழனி, ஆவினன்குடி, அருணாசலம், கயிலை – இங்கெல்லாம் திக் விஜயம் செய்து சினம் தணிந்த பரமகுருவாக அமர்ந்த இடம் திருத்தணிகை! முருகனது அடியார்களை எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

10....... பாடல் வரிகளுக்கு

முருகன் உறையும் கோயில்களும் அவற்றின் கோபுரங்களின் அழகும், தீர்த்தங்களின் சிறப்பும் எப்படி வர்ணிப்பது.

மயிலேறிவரும் வடிவேலன் யாருடைய மருமகன்? ஒருமுறை யானை ஒன்று திருமாலைப் பூசிக்கத் தாமரை மலர் பறித்தபோது, முதலை ஒன்று காலைக் கவ்வ, ஆதிமூலமே எனக்கதறிய யானையைக் காப்பாற்றியவன் திருமால். திருமால் மருகன் முருகன். முருகனோ பரமேசுவரன் தந்த பரமானந்த சச்சிதானந்த ஸ்வரூபன். முருகனது அடியார்களை எதிர்க்கும் தீமையை முழுவதுமாக அழித்திடும் சக்தியாயுதமான ஞானவேல் வாழ்க!

... சத்ரு சங்கார வேற் பதிகம் – விளக்க உரை முற்றிற்று ...

வேலுண்டு வினையில்லை! ... மயிலுண்டு பயமில்லை!!

மூவிரு முகங்கள் போற்றி
முகம் பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்ற
ஈராறு தோள் போற்றி – காஞ்சி
மாவடி வைக்கும செவ்வேள்
மலரடி போற்றி – அன்னான்
சேவலும் மயிலும் போற்றி
திருக்கைவேல் போற்றி போற்றி.

ஆறிரு தடந்தோள் வாழ்க!
ஆறுமுகம் வாழ்க! வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க!
குக்குடம் வாழ்க! செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க!
யானைதன் அணங்கு வாழ்க!
மாறிலா வள்ளி வாழ்க!
வாழ்க சீர் அடியாரெல்லாம்.



# मातृपञ्चकम्

# மாத்ருபஞ்சகம்

## முன்னுரை

## आत्मारामो विराजते

ஆதி அந்தம் இல்லாத நமது அனாதியான ஸனாதன தர்மங்களுக்கு ஆணிவேராக இருப்பது வேதங்களேயாகும். நமது ஆஸ்திகமதங்களுக்கு கர்பாதானம் முதல் 48 ஸம்ஸ்காரங்கள் விதிக்கப்பட்டு இருக்கின்றன. நாமகரணம், அன்னப்ராசனம், சௌளம், உபநயனம், விவாஹம் ஷஷ்டி அப்தபூர்தி, சதாபிஷேகம் முதலிய கர்மாக்களை செய்வதற்காக விவரமான ப்ரயோக புஸ்தகங்கள் உள்ளன. அதே போல் மரணத்திற்கு பிறகு செய்யும் கர்மாக்களைப் பற்றி விஸ்தாரமான தர்மசாஸ்த்ரம், ப்ரயோக புஸ்தகங்களும் உள்ளன. அவை விஸ்தாரமான இருப்பதால் என் போன்ற ஸாதாரணமானவர்களும் ஜனன–மரண தத்வத்தை புரிந்துகொள்ளும்படி எழுதவேண்டும் என்று எனது ஆத்மா தூண்டியது. அதனால் இதனை எழுத முயற்சிக்கிறேன். எனது முயற்சி பலனாக வேண்டு பொருட்டு இந்த ஜனன–மரண தத்வத்தின் தொகுப்பை ஆன்மீக மாதபத்திரிகைகளான வைதிகஸ்ரீ, அமரபாரதீ, ஜகத்குரு, அம்மன் அருள் முதலிய மாதபத்திரிகையில் வெளியிட்டால் ப்ராஹம்ண ஸமூஹத்திற்குச் செய்யும் பெரும் ஸேவையாகும். மேலும் உபாத்யாயம் செய்து வைக்கும் வாத்தியார்கள் (ப்ருஹஸ்பதிகள்) தாங்கள் தங்கள் க்ரஹஸத்ர்களுக்கு ஓர் நகல் கொடுத்தால் அதன்மூலம் அவர்களுக்கு நம்பிக்கை, பக்தி ச்ரத்தை ஏற்பட்டு அனுஷ்டிப்பார்கள். அதன் மூலம் தங்கள் குடும்பங்களும் உலகமனைத்தும் ஸகலச்ரேயஸ்களையும் ஸகல மங்களங்களையும் அடைந்து பரமக்ஷேமமாக வாழவேண்டும் என்று ப்ரார்த்திறேன்.

கர்மாவில் பூர்ண நம்பிக்கை உடைய பக்தன்
அடையபலம் ராமகிருஷ்ண தீக்ஷதிர்

।। लोकास्समस्ता सुखिनो भवन्तु ।।

# आत्मारामो विराजते

# जननं मरणम्

## பிறப்பும் இறப்பும்

இதன் தத்துவத்தை அவசியம் தெரிந்து கொள்ளவேண்டும். ஆண் பெண் சேர்க்கையால் சுக்தசோணித சங்கமத்தால் கரு உண்டாகிறது. அது மாதந்தோறும் எவ்வாறு வளர்கிறது. எந்தளந்த மாதத்தில் கண், காது, மூக்கு, கை, கால்கள் என்னும் அவயவங்கள் உண்டாகின்றன. ஆண் – பெண் உருவங்கள் எந்த மாதத்தில் தெரியவரும் என்னும் விஷயத்தை வாத்ஸ்யாயன மஹரிஷி தனது காமசூத்ரம் என்னும் நூலில் விஸ்தாரமாக விளக்கியுள்ளார்.

அதேபோல மனிதன் இறந்தது முதல் 12 நாட்கள் வரை அந்த ஆத்மா எப்படி வளர்கிறது. 10 நாட்களில் கை, கால்கள் முதலிய அவயவங்கள் எவ்வாறு உண்டாகின்றன. 10ம் நாளன்று பூர்ணசரீரமாகும் இந்த ஆத்மா 12ம் நாள் எவ்வாறு பித்ருக்களின் கூட்டத்தில் சேருகிறது. அதற்காக நாம் என்னென்ன கர்மாக்கள் செய்யவேண்டும் என்பதைப்பற்றி தர்மசாஸ்த்திர நூல்களும், ஸ்ரீகருடபுராணமும் தெளிவாக எடுத்துரைக்கிறது.

உலகில் சலிக்காததும், போதும் என்று தோன்றாத விஷயங்கள் இரண்டு உண்டு. ஒன்று ஸ்ரீமத் ராமாயணத்தை எத்தனை முறை எத்தனை பேரிடம் கேட்டாலும் மீண்டும் மீண்டும் கேட்கத் தோன்றும். அதுபோல தாய்–தந்தையரின் அன்பும் எவ்வளவு தான் நமக்கு கிடைத்தாலும் இன்னும் இன்னும் என்று மனம் ஏங்கும். தாய் தந்தையர்கள் எத்தனை ஆண்டுகாலம் நம்மோடு வாழ்ந்தாலும் போதும் என்று தோன்றாது. ஜனனம் மரணம் ஆகிய இரண்டும் ஒன்றையொன்று பிரியாது. நாம் பிறக்கும் போதே நமது மரணமும் பிறந்துவிடுகிறது. அதாவது நிச்சயிக்கப்படுகிறது. இதற்கு யாரும் விதிவிலக்கல்ல. பிறந்தவரெல்லாம் ஒருநாள் நிச்சயம் இறந்தாக வேண்டும் என்ற நியதியை யாராலும் மாற்ற இயலாது என்ற தத்துவத்தை மனதில் கொண்டு மாதா–பிதா–உற்றார் உறவினர்களின் மரணத்தால் ஏற்படும் துக்கத்தை சமாதானம் செய்து கொண்டு துக்கத்தில் உழன்று கிடக்கும் மற்றவர்களையும்

சமாதானம் செய்வித்து மேற்கொண்டு நடக்கவேண்டிய கர்மாக்களையும் கடமைகளையும் முறைப்படி ச்ரத்தையுடன் செய்யவேண்டும். இந்த நியதி நமக்கு மட்டுமல்ல, சகலத்தையும் துறந்த ஸ்ரீஆதிசங்கர பகவத்பாதர் அவர்களும் தனது தாயாரின் வயோகத்தை தாங்க முடியாமல் மாத்ருபஞ்சகம் என்னும் ஐந்து ஸ்லோகத்தில் கதறி அழுது தனது துக்கத்தை வெளிப்படுத்தியிருக்கிறார். அத்துணை பெருமை வாய்ந்த மஹானே அப்படி இருந்திருக்கிறார் என்றால் நாமெல்லாம் எம்மாத்திரம்....

மரணம் என்றால் அழிவு என்று பொருள். அழிவு என்றால் எது அழிகிறது? பஞ்சபூதத்தாலான இந்த சரீரம் தான் அழிகிறது. ஆதம்ா அழிவதில்லை. ஆத்மாவை வெட்ட முடியாது. எரிக்க முடியாது, அது அழிவில்லாதது. ஆகவே தான் ஆதம்ாவை நித்யமானது என்று சொல்கிறோம். நாம் எப்படி ஒரு கிழிந்த வஸ்திரத்தை நீக்கி புதிய வஸ்திரம் அணிகிறோமோ அதுபோல இந்த சரீரத்தின் ஆயுள் முடியும் போது இந்த சரீரத்தை விடுத்து ஆதம்ா வேறு ஒரு யாதனா சரீரத்தை பிடித்துக் கொண்டுவிடுகிறது.

நாம் அந்த யாதனா சரீரத்தில் உள்ள அந்த ஆத்மாவை ஒரு பாஷாணத்தில் ஆவாஹனம் செய்து 10 தினங்களும் அதற்கு வஸ்த்ரோதகமும் திலோதகமும் பிண்டப்ரதானமும் செய்து பூஜிக்கிறோம். 10ம் நாள் அது பூர்ணசரீரமாக வளர்ந்து பசி–தாகத்தால் தவிக்கும் போது அன்றைய தினத்தில் அன்னம் பக்ஷணங்களுடன் ப்ரபூதபலி என்று கொடுத்து பூஜிக்கிறோம். 11ம் நாளில் எகோத்திஷ்டம் ஆதி ச்ரார்த்தம் எனப்படும் முதல் ச்ரார்த்தம் செய்கிறோம். 12ம் நாளில் சபிண்டீகரணம் என்று இந்த ஆதம்ாவை வசு–ருத்ர–ஆதித்ய ரூபமாய் விளங்கும் நம் பித்ருக்களின் கூட்டத்தில் சேர்ந்து தேவதா ஸ்வரூபத்தை அடைந்த அந்த ஆதம்ாவிற்கு ஆண்டுதோறும் ப்ரத்யாப்தீக ச்ரார்த்தங்களை செய்கிறோம்.

மனிதனாக பிறந்த ஒவ்வொருவரும் தனது வாழ்நாளில் ஒருமுறையாவது கயா என்னும் புண்யக்ஷேத்ரத்திற்கு சென்று பல்குனி நதியில் ஸ்நானம் செய்து விஷ்ணுபாதத்தில் பிண்ட சமர்ப்பணம் செய்து வடவ்ருக்ஷம் என்னும் ஆலமரத்தினடியில் தர்ப்பணம் விட வேண்டும். இவ்வாறு கயாச்ராத்தம் செய்து பித்ரு

தேவதைகளை த்ருப்தி செய்வித்து அவர்களது ஆசீர்வாதங்களை பெறவேண்டும் என்று தர்ம சாஸ்த்திரங்களின் மூலம் மஹரிஷிகள் நமக்கு அழுத்தமாகவும் ஆழமாகவும் சொல்லியிருக்கிறார்கள். இதுவே நமது ஸநாதன தர்மத்தின் சிறப்பாகும். இதன்படியே நமது முன்னோர்களும் அனுஷ்டித்து காட்டியிருக்கிறார்கள். அதையே நாமும் வாழையடி வாழையாக அனுபவித்து வருகிறோம்.

நெய் முதலியவற்றை எவ்வாறு ஹோமத்ரவ்யம் என்கிறோமோ அவ்வாறாக இந்த பஞ்சபூத சரீரத்தையே ஒரு ஹோமத்ரவ்யம் என்கிறோம் அவ்வாறாக இந்த பஞ்சபூத சரீரத்தையே ஒரு ஹோமத்ரவ்யமாக கருதவேண்டும் என்று தர்மசாஸ்திரம் கூறுகிறது. ஆகவே நிறைய கட்டைகளை சேர்த்து அதில் அக்னியை இட்டு அந்த அக்னியில் இந்த சரீரத்தை ஆஹூதியாக ஸமர்ப்பிக்க வேண்டும். மின்சாரத்தில் எரிக்கக் கூடாது. அது மிகவும் தவறாகும். ஆகவே நம் முன்னோர்களின் வழியிலேயே சென்று அவர்கள் அனுஷ்டித்ததையே நாமும் அனுஷ்டித்து மாத்ரு–பித்ரு தேவதைகளின் அருளாசிகளைப் பெற்று ஐஹகி ஆமுஷ்மிக பலன்களையும் ஜன்மம் எடுத்து பயனையும் அடைவோமாக என்று ப்ரார்த்திப்போம்.

**जरमश्लोक: சரமஸ்லோகம் வாசிக்கும் தத்வம்**

பிறந்த உடன் எழுதுவது ஜனனஸ்லோகம். ஜனனீ ஜன்ம சௌக்யாணம் வர்தனீ குல ஸம்பதாம் பதவீ பூர்வபுண்யானாம் லிக்யதே ஜன்மபத்திரிகா என்று எழுதுவது ஸம்பரதாயம். இறந்த பிறகு எழுதுவது சரமஸ்லோகம். சரமம் என்றால் முடிவு என்று பொருள். அதாவது வாழ்க்கையின் முடிவில் எழுதுவது என்று பொருள். சரம ஸ்லோகத்தை இறந்தவர்கள் 10வது தினம் மாலையிலோ அல்லது 13வது சுபஸ்வீகரண தினம் ஹோமம் முடிந்தோ வாசிப்பது என்ற ஒரு ஸம்ப்ரதாயங்களும் உள்ளன.

சரமஸ்லோகம் படிக்க வேண்டும் என்பதற்கான ப்ரமாணம் ஆதாரம் பகவான் வ்யாஸர் எழுதிய கருடபுராணம் தான். இதன் விளக்கத்தை ஓர் கதையின் மூலம் கருடபுராணம் விளக்கமாக தெரிவிக்கிறது. தர்ம க்ஷரதி கீர்த்தனாத் என்கிறது தர்மசாஸ்திரம். அதாவது ஒருவன் தான் செய்த தர்மங்களை தானே சொன்னால்

அவை அழிந்துவிடும் அவைகளை பிறர் சொன்னால் பத்து நூறு ஆயிரமாக வளர்ந்து இறந்தவர்களுக்கு நற்கதியை அளிக்கிறது என்று தர்மசாஸ்திரம் கூறுகிறது.

அதைப் பற்றிய கதை – நமது புனித பாரதபூமியில் இந்த்ரத்யும்னன் என்னும் ஓர் அரசன் ஆண்டு வந்தான். அவன் தன் வாழ்நாளில் கணக்கில் அடங்காத தர்மங்களை செய்துவந்தான் பிறந்தவன் ஓர் நாள் இறந்தாக வேண்டும் என்ற நியதியின்படி ஒருநாள் இறந்தான் அவன் செய்த தர்மங்களுக்காக அவனுக்கு ப்ரம்ஹலோகமே கிடைத்து. ப்ரம்ஹலோகம் சென்றான். ப்ரம்ஹா உடன் ஸரிஸமமாக பேச தொடங்கினான். ப்ரம்ஹாவின் புத்ரன் நாரதருக்கு இது பிடிக்கவில்லை. நம் தகப்பனார் முன் இந்த்ராதி தேவர்களும் கைகட்டி வாய்பொத்தி நிற்பது வழக்கம் இவன் ஸாதாரண மனிதன் என்று நினைத்து இவனுக்கு புத்தி புகட்ட நினைத்து அவன் அருகில் சென்று தாங்கள் யாரோ என்று விசாரிக்க ஆரம்பித்தார் அவன் என்னை தெரியாதா, நான் மஹாராஜா இநத்ரத்யும்னன், நான் இவ்வளவு தர்மங்கள் செய்துள்ளேன். என்னை தெரியாதவர்களே கிடையாது என்று கூறி தான் செய்த தர்மங்களை கூறினான். தர்ம க்ஷரதி கீர்த்தனாத் என்ற தர்மசாஸ்த்ரபடி எல்லாதர்மங்களும் அழிந்துவிட்டன க்ஷீணே புண்யே மர்த்யலோகம் தான் வர வேண்டும் அதன்படி பூலோகம் அனுப்பப்பட்டான். அப்போது அவன் ப்ரம்ஹவிடம் வேண்டினான் நுணலும் தன் வாயால் கெட்டது என்ற பழமொழிக்கு ஏற்றவாறு என்னை நானே அழித்துக் கொண்டேன் என்னை மன்னித்து அருள வேண்டும் என்று வேண்டினான். ப்ரம்ஹவும் நீ பூலோகம் சென்று உனது தர்மங்களை பிறர் சொன்னால் ஆயிரமாக வளர்ந்து மீண்டும் உனக்கும் இந்த உலகம் கிடைக்கும் என்று அருள் புரிந்தார்.

அரசனும் பூலோகம் வந்தான். தான் ராஜ்ஜியபரிபாலனம் செய்த இடமாகவே தெரியவில்லை. காடு இருந்த இடம் நாடு, நாடு இருந்த இடம் காடு இப்படியாக மாறி இருப்பதைக் கண்டு திகைத்துப் போனான். அதாவது அவன் செய்த தர்மங்களை சொல்ல ப்ரம்ஹதேவருக்கு ஒருநாள் ஆயிற்று அப்படி என்றால் 4 யுகங்கள்

முடிந்துவிட்டன. பூலோகம் வந்த அரசன் தன்னைப் பற்றி சொல்வதறக்கான ஒருவரை தேடி அலைந்து கொண்டு வந்த ஸமயம் சிரஞ்சீவியான மார்கண்டேயரை ஸந்தித்து தன்னைப் பற்றி சொல்லும்படி வேண்டினான். அவர் நான் ஒரு யுகம் தான் சிரஞ்சீவி எனக்கு உன்னைப் பற்றி தெரியாது, இரண்டுயுகம் சிரஞ்சீவி என் அண்ணன் ஸ்வேதாங்கன் என்பவர் கொக்கு உருவில் உள்ளார் என்று அழைத்துச் சென்றார்.

அவர் நான் இரண்டு யுகம் தான் சிரஞ்சீவி. எனக்கு உன்னைப் பற்றி தெரியாது மூன்று யுகம் சிரஞ்சீவியான எனது அண்ணன் உலூகபட்டர் என்பவர் கோட்டான் வடிவில் உள்ளார் என்று அங்கு அழைத்துச் சென்றார். அவர் பார்த்தார். நான் மூன்று யுகம் தான் சிரஞ்சீவி. என் காலத்தில் இந்த ராஜா இல்லை. எனக்கு இவரைப் பற்றி தெரியாது நான்கு யுகம் அதாவது ஒரு கல்பம் சிரஞ்சீவியாக எனது அண்ணன் ஆமை வடிவத்தில் கூர்மாசாரியாக அரசனின் தர்மங்களை எடுத்துக் கூற தர்மங்கள் பன்மடங்கு வளர்ந்தது. நாரதமஹரிஷியே புஷ்பகவிமானத்துடன் வந்து இந்த ராஜாவை ப்ரம்ஹலோகம் அழைத்துச் சென்றார் என்பது சரித்திரம்.

ஆகவே இறந்தவர்களைப் பற்றி ஸ்லோகம் எழுதி அவர்களின் தார்மிக குணங்களை பிறர் சொன்னால் பன்மடங்கு வளர்ந்து அவர்களுக்கு நற்கதி கிடைக்கிறது என்ற சாஸ்த்திரப்படி பந்துக்கள் நண்பர்கள் அனைவரும் சேர்ந்து சரமஸ்லோகத்தை எழுதி இறந்தவர்களின் குணங்களை சொன்னால் வேதப்ராம்மணர்கள் அதனை ததாஸ்து என்று ஆமோதிக்க இறந்தவர்களுக்கு நற்கதி கிடைக்கிறது என்பது நிச்சயம் என்ற பூர்ண நம்பிக்கையில் இன்றும் இதனை அனுஷ்டித்து வருகிறோம். மேலும் தொடர்ந்து அனுஷ்டிப்போம்.



।। श्रीचन्द्रमौळीश्वरस्वामिने नमः ।।

श्रीशङ्करभदबत्पदकृतम्

## ।। मातृपञ्चकम् ।।

## மாத்ருபஞ்சகம்

**उास्तं तावदीयं प्रसूतिसमये दुर्वारशूलव्यथा**
**नैरच्यं तनुशोषपां मलमयी शय्य च सांवत्सरी ।**
**एकस्यापि च गर्भभारभरणक्लेशस्य यस्याक्षमो**
**दातुं निष्कृतिमुत्रतोऽपि तनयस्तस्यै जन्यै नमः ।।**

ஆஸ்தாம் தாவதீ[3]யம் ப்ரஸூதிஸமயே து[3]ர்வாராலல்யதா[3]
நைருச்யம் தநுஸோஷணம் மலமயீ ஸய்யா 4 ஸாம்வத்ஸரீ
ஏகஸ்யாபி ச கர்ப[4]பா[4]ரப[4]ரணக்கேஸஸ்ய யஸ்யாக்ஷமோ
தா[3]தும் நிஷ்க்ருதிமுந்நதோபி தநயஸ்தஸ்யை ஜநந்யை நம :

தாயே! கர்ப்பம் தரித்தும் மசக்கை ஏற்பட்டு வாந்தி செய்தீர்களே! அதற்கு பதில் செய்யமுடியுமா? சில மாதங்களானதும் விளக்கெண்ணெயில் கஷாயம் செய்து சாப்பிட்டீர்களே! அதற்கு பதில் செய்ய முடியுமா? ஐந்து மாதங்களானதும் உப்பு காரம் குறைத்து ஆஹாரம் செய்தீர்களே! அதற்கு பதில் செய்ய முடியுமா? ஏழுமாதமானதும் குழந்தையான நான் கர்பத்தில் அசைய ஆரம்பித்ததும் என் மீது அடிபடுமோ என்று மல்லாந்து படுத்து பெருமூச்சு விட்டீர்களே! அதற்கு பதில் செய்ய முடியுமா? ப்ரஸவஸமயத்தில் ப்ரஸூதிவாதம் என்னைக் கொண்டு வராமல் அலறினீர்களே! அதற்கு பதில் செய்ய முடியுமா? குழந்தைப்பருவத்தில் தங்கள் படுக்கையில் மலஜலம் கழித்து தங்கள் படுக்கையை ஆபாஸம் செய்த என் முகத்தைப்பார்த்து சிரித்தீர்களே! அதற்கு பதில் செய்ய முடியுமா? என்னை கர்பத்தில் தரித்தது முதல் துறவியாக்கிய வரையில் ஒன்றுக்கு கூட என்னால் பதில் செய்ய முடியவில்லை. இந்த நமஸ்காரம் தான் என்று அன்னையின் பாதங்களில் கண்ணீர் வடித்து நமஸ்கரித்தார்.

गरुकुलमुपसृत्य स्वप्नकालेऽपि घ्ष्वा
यतिसमुचितवेषं प्रारुदो मां त्वमुच्चैः।
गुरुकुलमथ सर्वं प्रारुदत्ते समक्षम्
सपदि चरणयोस्ते मतुरस्तु प्रणामः ॥

கு3ருகுலமுபஸ்ரித்யஸ்வப்நகாலேபி த்3ருஷ்ட்வா
யதிஸமுசிதவேஷம் ப்ராருதோ3 மாம் த்வமுச்சை
கு3ருகுலமத2 ஸர்வம் ப்ராருதத்தே ஸமக்ஷம்
ஸபதி சரணயோஸ்தே மாதுரஸ்து ப்ரணாம

ஒரு ஸமயம் ஆசார்யாளின் தாயாரான ஆர்யாம்பாள், குருகுலம் சென்று குழந்தையை கட்டியணைத்துக் கதறினாள். அப்பொழுது குருமார்கள் வந்து கேட்டதற்கு இன்று விடியற்காலையில் என் குழந்தை துறவியானதாக ஸ்வப்னம் கண்டேன் என கூறினாள். அதைக்கேட்ட குருமார்களும் கதறினார்கள். அப்படிப்பட்ட தாயின் சரணங்களுக்கு நமஸ்காரங்கள்

न दत्तं मातस्ते मरणसमये तोयमपि वा
स्वधा वा नो दत्ता मरणदिवसे श्राद्धविधिना।
न जवा मातस्ते मरणसमये तारकमनुः
अहाले सम्प्राप्ते मयि कुरु दयां मातुरतुलाम् ॥ 3 ॥

ந த3த்தம் மாதஸ்தே மரணஸமயே தோயமபி வா
ஸ்வதா4 வா நோ த3த்தா மரணதி3வஸே ஸா்ாத்3த4விதி4நா
ந ஜப்த்வா மாதஸ்தே மரணஸமயே தாரகமநு
அகாலே ஸம்ப்ராப்தே மயி குரு த3யாம் மாதுரதுலாம்

தாயே! மரண ஸமயத்தில் நான் தங்களின் வாயில் ஜலங்கூட விடவில்லையே. நான் துறவியாகிவிட்டதனால் இனி ச்ராத்தம் கூட செய்ய அதிகாரம் இல்லையே. கடைசிக்காலத்தில் தாயின் தலைமை மடிமீது வைத்துக்கொண்டு வலதுகாதில் தாரகநாமம் ஜபிக்க வேண்டுமே. அதுவும் நான் செய்யவில்லையே. என் ஸந்யாஸம் வீணாகாமல் அருள் புரியவேண்டுமென்று நமஸ்கரித்து ப்ரார்த்திக்கிறேன்.

(வாயில் அரிசியைப் போட்டபின் ஸ்ரீபகவத்பாதர்கள் கூறியது)

मत्तमणिस्त्वं नयनं ममेति राजेति जीवेति चिर सत! त्वम् ।
इत्युक्तवत्यास्तव वाचि मात: ददाम्यहं तपडुलमेव शुष्कम् ॥

முகத்தாமணிஸ்த்வம்நயநம் மமேதி
ராஜேதி ஜீவேதி சிர ஸுத த்வம்
இத்யுக்தவத்யாஸத்வ வாசி மாத
த$^3$தா$^3$ம்யம் தண்டு$^3$லமேவ ஸுஷ்கம்

தாயே! நான் குழந்தையாக இருந்தபோது என்னை மடியில் வைத்துக்கொண்டு மணியே! கண்ணே! முத்தே! ராஜாவே! என்றெல்லாம் கொஞ்சி கோவில் கோவிலாகச் சென்று என் குழந்தை சிரஞ்சீவியாக இருக்க வேண்டுமென்று ப்ரார்த்தனை செய்தீர்களே. அந்த வாய்க்கு வறட்டரிசியைப்போடுகிறேன் என்றார்.

अम्बति तातेति शिवेति तस्मिन् प्रसूतिकाले यदवोच उच्चै: ।
कृष्णेति गेविन्द हरे मुकुन्देति जनन्यै अहो रचितोऽयमञ्जलि: ॥

அம்பே$^3$தி தாதேதி ஸிவேதி தஸ்மின்
ப்ரஸூதிகாலே யத$^3$வோச உச்சை
க்ருஷ்ணேதி கோவிந்த$^3$ ஹரே முகந்தேதி
ஜநந்யை அஹோ ரசிதோயமஞ்ஜலி

அம்மா! அப்பா! சிவனே! க்ருஷ்ணா! கோவிந்தா! ஹரே! முகுந்தா! என்றெல்லாம் தாங்கள் பிரஸவ காலத்தில் வேதனையால் அலறினீர்களே! அந்த ஒரு கத்தலுக்கு தான் கைம்மாறு செய்யமுடியுமா? அத்தகைய தாய்க்கு இந்த நமஸ்காரம்!.

இந்த ச்லோகங்களைப் படிப்பதினால் தான் தாயே தெய்வமென்று தெரியும். அதனால்தான் தாய்க்கு மேற்பட்ட தெய்வமுமில்லை காயத்ரிக்கு மேற்ப்பட்ட மந்தர்முமில்லை என்று சாஸ்த்ரம் கூறுகிறது.

॥ न गायत्र्या: परो मन्त्र: न मातु दैवतं समम् ॥

# காஞ்சி காமகோடி
# ஸ்ரீ மகாஸ்வாமிகளின் அறிவுரை

## ஸந்தியாவந்தனம்
## (23–11–1932)

தனுர்வேதத்தில் அஸ்திரம் சாஸ்திரம் என்று இரண்டு வகை ஆயுதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன என்றும், அஸ்திரம் மந்திரபூர்வமாக ஒரு பதார்த்தத்தை விட்டால் எதன்மேல் விடுகிறோமோ, அது நாசமடையும் என்றும் அன்றொரு நாள் சொன்னேன். நாம் பிரதிதினமும் பண்ண வேண்டிய அஸ்திரப் பிரயோகம் ஒன்று இருக்கிறது. அஸுரர்களை நாசம் பண்ணுவதற்காகப் பிராம்மணர்கள் தினந்தோறும் ஓர் அஸ்திரப்பிரயோகம் பண்ணவேண்டும். அஸ்திரம் என்றால் ஒன்றை விட்டு எறிகிறதல்லவா? நம்முடைய புத்தியை ஆசிரயித்திருக்கின்ற அஸுரர்கள் தொலைய வேண்டு மென்று ஜலத்தை எறிகிறது. 'பாபம், பொய் முதலியவை தொலைய வேண்டு மென்று ஜலத்தை எறிகிறது. ஞான ஸூரியன் பிரகாசிக்க வேண்டும். அதை பிரகாசிக்காமல் பண்ணிக் கொண்டு உள்ளே இருக்கிற பிரதிபந்தங்கள் நிவர்த்தியாக வேண்டும்' என்று அந்த அஸ்திர பிரயோகம் பண்ண வேண்டும். ஒவ்வொருநாளும் மூன்று வேளை பண்ண வேண்டும். எந்தக் காரியம் பண்ணினாலும், மூச்சைப் பிடித்துக் கொண்டுக் அதைப் பண்ணவேண்டும். அதுதான் ஸந்தியாவந்தனத்தில் அர்க்கியம் கொடுப்பது.

ஒரு காரியத்தை 'சிரத்தையாக' ஒருவன் பண்ணினால் மூச்சைப் பிடித்துக் கொண்டு பண்ணுகிறான்' என்று சொல்லுகிறோம். இந்தக் காரியத்தையும் மூச்சைப் பிடித்துக் கொண்டு பண்ண வேண்டும். தினந்தோறும் இதைப் பண்ணி வந்தால் அந்தச் சத்ருக்கள் நாசமாய்ப் போய் விடுவார்கள். இது பண்ணுவதற்கு முதலில் மூச்சைப் பிடித்துக் கொள்ள வேண்டும். இப்பொழுது, நாம் மூச்சைத் தான் பிடிக்கிறோம். 'நாசிகாம் ஆயம்ய' என்று சொல்லுவதில்லை. 'ப்ராணான் ஆயம்ய' என்றுதான் சொல்லியிருக்கிறது.

எந்தக் காரியம் பண்ணினாலும் மனது ஒருமைப்பட வேண்டும். ஜலத்தைக் கொண்டு அஸ்திரப் பிரயோகம் செய்வதற்கு மனது ஒருமைப்பட வேண்டும். அதற்காகத் தான் மூச்சைப் பிடிக்க வேண்டும். மூச்சைப் பிடித்தால் மனது எப்படி நிற்கும்? மனது நிற்கிற பொழுது மூச்சு நிற்கிறதல்லவா? பெரிய ஆச்சரியம் உண்டாகிறது. பெரிய துன்பம் வருகிறது, பெரிய சந்தோஷம் ஏற்படுகிறது; அப்பொழுது மனது லயித்துப் போய் ஏகாந்தமாக நிற்கிறது. ஹா ! என்று கொஞ்ச நேரம் நின்று போய்விடுகிறது. அப்புறம் வேகமாக ஓடுகிறது. நாமாக அதை நிறுத்தவில்லை. இது தானாக நிற்கிறது. மனது அதிலே ஈடுபட்டு நின்றுவிடுகிறது. பின்பு பெருமூச்சு விடுகிறோம். எதற்காக? முன்பு விடாத மூச்சையும் சேர்த்து விடுகிறோம். மனது ஒருமைப்படுகிற போது மூச்சு நிற்கிறது. மூச்சு நின்றால் மனது ஒருமைப்படும்.

நாம் அர்க்கியம் விடும்போது சித்தைகாக்கிரியத்தோடு விட வேண்டும். பிராணாயாமம் பண்ணினால் சித்தை காக்கிரியம் உண்டாகும். அதை நிறையப் பண்ணுவது யோகத்திற்கு; அது கஷ்டமானது; உபதேசத்தின்படி செய்ய வேண்டியது. நாம் அதிகமாகப் பண்ணினால் பத்துத் தடவை தான் பண்ணுகிறோம். மூன்று பண்ணு என்று சிலவற்றிற்கு நியமம் ஏற்பட்டிருக்கிறது. சிறு வயதில் உப நயனமான காலம் முதற்கொண்டு சிரமமாக நாம் பிராணாயாமம் பண்ணிக் கொண்டு வந்திருந்தால், இத்தனை நாளில் யோகீசுவராக இருப்போம். பண்ணுகிறதைச் சரியாகப் பண்ண வேண்டுமல்லவா? அரை நிமிஷம் பிராணன் நிற்கப் பண்ண வேண்டும். அதிகமாக வேண்டாம். சரீரத்துக்குத் தகுந்தாற் போல செய்யலாம். பிராணன் நின்றால் மனது நிற்கும். அது நின்றால் நாம் விடுகிற ஜலம் அஸ்திரமாகும். ஸந்தி பண்ணி ஆரம்ப முதல் கடைசி வரையில் பரமேசுவரார்ப்பணம் பண்ண வேண்டும். அர்க்கியமாகிய அஸ்திரப் பிரயோகத்தைப் பண்ண வேண்டும். பின்பு காயத்ரீ பண்ண வேண்டும். பிராணாயாமத்தைக் கூடிய வரையிற் பண்ண வேண்டும்; கொஞ்சம் நிறுத்துகிறது. பின்பு விடுகிறது என்ற அளவில் இருந்தாலே போதும். அதிகம் வேண்டாம். ஸங்கல்பம், மார்ஜனம், பிராசனம், அர்க்கியப்பிரதானம், ஜபம் ஸ்தோத்திரம், அபிவாதனம் இவ்வளவும் பரமேஜவரனுடைய அநுக்கிரஹம் பெறுவதற்காகப் பண்ணுகிறேனென்று சொல்லிச் செய்ய வேண்டும். ஸங்கல்பம் என்பது அதுதான். அப்புறம் மார்ஜன் மந்திரம் சொல்லித் தீர்த்தத்தைப் புரோஷணம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

இவ்வளவுக்கும் பிரணாயாமம் முக்கிய அங்கம். திரிகாலங்களிலும் ஸ்வல்பம் பண்ண வேண்டும். அதிகமாகப் பண்ணினால்தான் உபத்திரவம் உண்டாகும். அதற்கு குரு வேண்டும். தினந்தோறும் பண்ண வேண்டியதால், ரோகிஷ்டன் கூடப் பண்ண வேண்டியிருப்பதால், உபத்திரவம் இராது.

மனோவாக்காயங்களால் பாபம் பண்ணியிருக்கிறோம். அந்த மூன்றினாலும் செய்யும் கர்மாக்களால் அந்தப் பாபத்தைப் போக்கிக் கொள்ளவேண்டுமென்று முன்பு சொல்லி இருக்கிறேன். ஸந்தியாவந்தனத்தில், வாக்கினால் மந்திரம் சொல்லுகிறோம்; காயத்ரீ ஜபத்தை மனதினால் தியானித்துப் பண்ணுகிறோம்; மார்ஜனம் முதலியவைகளால் காயசுத்தி உண்டாகிறது, இவைகளைத் தவிர கர்மயோக பக்தியோக ஞானயோக ரூபமாகவும் ஸந்தியாவந்தனம் இருக்கிறது. ஸந்தியாவந்தனம் பண்ண அவரவர்கள் தங்கள் தங்களுக்கென்று ஒவ்வொரு பாத்திரம் வைத்துக்கொள்ள வேண்டும். அதிலே ஸந்தியாவந்தனம் பண்ண வேண்டும். பிராணாயாமம் அவசியம் பண்ண வேண்டும். ஸந்திதயாவந்தனத்தை அவஸரமாகப் பண்ணக்கூடாது.

ஸரியான காலத்தில் உசிதமாக ஸந்தியா நுஷ்டானம் பண்ணினதால்தான் பலர் ரிஷிகள் ஆனார்கள். அபிவானதத்தில் எந்த மஹரிஷியினுடைய ஸந்ததியில் பிறந்திருக்கிறோமோ அந்த மகரிஷி கோத்திரத்தைச் சொல்லி அன்று முதல் காயத்ரீ ஜபிக்கப்பட்டு வருகிறது. அந்த கோத்திரத்தில் பிறந்ததற்காவது கர்மா நுஷ்டானங்களைச் செய்ய வேண்டியது நமது கடமை. அந்த முதல் ரிஷிக்கு அப்புறம் எவ்வளவோ பேர் இருந்திருக்கிறார்கள். திரயார் ஷேயம், பஞ்சார்ஷேயம், ஸப்தார்ஷேயம், ஏகார்ஷேயம் என்று சொல்லுகிறார்கள். அந்த அந்த கோத்திரத்தில் அவ்வளவு ரிஷிகள் இருந்திருக்கிறார்கள் என்று அதனால் தெரிய வருகிறது. ஸ்ரீவத்ஸகோத்ரம் பஞ்சார்ஷேயம்.

தொடர்ச்சியாக வந்த தாரையை நாம் அறுத்து விடக் கூடாது. பிராணாயாமத்தோடு சித்தைகாக்கிரியத்தோடு மந்திர லோபமில்லாமல் பரமேசுவராா்ப்பணம் பண்ணி எல்லாவற்றையும் பண்ண வேண்டும். பக்தி சிரத்தையோடு பண்ண வேண்டும். மர்மகலாபத்தோடு பண்ண வேண்டும். பக்தி சிரத்தையோடு பண்ண வேண்டும். அர்த்தத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

# காயத்ரீ

## (23–11–1932)

காயத்ரீ என்னும் வார்த்தைக்கு எவர்கள் தன்னைக் கானம் பண்ணுகிறார்களோ அவர்களை ரஷிப்பது என்பது அர்த்தம்.

கானம் பண்ணுவதென்பது பிரேமையுடனும், பக்தியுடனும் உச்சரிப்பதாகும். யார் தன்னைப் பயபக்தியுடனும், பிரேமையுடனும் உச்சாரணம் செய்கிறார்களோ அவர்களைக் காயத்ரீ மந்திரம் ரக்ஷிக்கும். அதனால் அந்தப் பெயர் அதற்கு வந்தது. வேதத்தில் காயத்ரீயைப் பற்றிச் சொல்லும் பொழுது ''காயத்ரீம் ஸந்தஸாம்மாதா'' என்று இருக்கிறது. சந்தஸ் என்பது வேதம். வேத மந்திரங்களுக்கெல்லாம் தாயார் ஸ்தானம் காயத்ரீ என்று வேதம் சொல்லுகிறது. சாஸ்திரப் பிரகாரம் செய்ய வேண்டிய கார்யங்களுக்கெல்லாம் முக்கியமான காரியம் இது என்று சொல்லும் பொழுது வேதம், மந்திரசக்தி குறையாமல் தேஹத்தைச் சுத்தியாக வைத்துக் கொள்ளவேண்டும் என்று வேதம் சொல்லுகிறது.

தேஹம் ஒருதேவாலயம், ஜீவன் ஈஸ்வரஸ்வரூபம். ஆலயத்தில் அசுத்தியோடு போகக்கூடாது. அங்கே அசுத்தமான பதார்த்தங்களைக் கொண்டு போகக் கூடாது. மாம்ஸம், சுருட்டு முதலியவைகளைக் கொண்டு போனால் அசுத்தம் உண்டாகும். ஆகம சாஸ்திரங்களில் தீட்டோடும் தேஹ அசுத்தத்தோடும் போகக் கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியே தேஹம் ஒரு தேவாலயமானால் அதிலும் அசுத்தமான பதார்த்தங்களைச் சேர்க்கக்கூடாது. மந்திர சக்தி இருக்கிற தேஹத்தில் அசுத்தியானவைகளைச் சேர்த்தால் அது கெட்டுப்போய்விடும். வீட்டுக்கும் தேவாலத்திற்கும் வித்தியாஸம் இருக்கிறது. வீட்டிலும் அசுத்தம் பண்ணக் கூடாது; ஆனாலும் தேவாலயத்தைப் போல அவ்வளவு கடுமையாக அசுத்தம் வராமல் வைத்துக் கொள்ள வேண்டியதில்லை. தேஹங்களுக்குள் சில தேஹங்கள் தேவாலயத்தைப் போல இருக்கின்றன. பிராமம்ண தேஹங்கள் வேதமந்திர சக்தியை ரக்ஷிக்க வேண்டியவைகளாதலால் அதிகமான பரிசுத்தமாக இருக்க வேண்டும். அந்தத் தேஹம் மற்றத் தேஹங்களைவிட அதிகமான பரிசுத்தியோடு இருக்க வேண்டும். அசுத்தியான பதார்த்தங்களை உள்ளே சேர்க்கக்கூடாது. மந்திர

சக்தியை ரக்ஷித்து அதனால் லோகத்துக்கு நன்மையை உண்டாக்கவேண்டுவது பிராம்மணன் கடமை. அவனுடைய தேஹம் தேவாலயத்தைப் போல் சுத்தமாக வைத்துக் கொள்ளப்பட வேண்டும். அதனால் தான் அவனுக்கு அதிகமான நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் அது பண்ணுகிறார்கள்; நாமும் ஏன் பண்ணக்கூடாது என்று அசுத்தியைத் தரும் காரியங்களை பிராம்மணன் பண்ணக்கூடாது. அவர்களெல்லாம் சரீரத்தை வைத்துக் கொண்டு ஸந்தோஷமான அனுபவங்களை அடைகிறார்களேயென்று நாமும் நமக்குத் தகாதவற்றைச் செய்யக்கூடாது. பிராம்மணனுக்குத் தேஹம் ஸந்தோஷத்தை அனுபவிப்பதற்காக ஏற்பட்டதல்ல. வேதத்தை ரஷிக்கிற தேஹம் அது. அதற்காகத்தான் செலவு பண்ணி உபநயனம் முதலியவைகளைச் செய்து கொள்ளுகிறோம். வேத மந்திரங்களை ரக்ஷப்பதற்காக அதை வைத்துக் கொள்ள வேண்டும். தேஹத்தைத் தேவாலயமாக வைத்து அதற்குள் ஆசாரத்தை வைத்துக் கொள்ளுவதனால் எல்லோருக்கும் ஸௌக்கியம் உண்டாகும். 'எல்லோரும் தொழில் பண்ணுகிறார்களே! பணம் ஸம்பாதிக்கிறார்களே! ஏன் நாம் செய்யக்கூடாது' என்று பிராம்மணன் நினைக்கக் கூடாது. நம்முடைய தொழிலை நன்றாகச் செய்துவிட்டு அதனோடு கூடக் கொஞ்சம் பிரயத்தனப் படவேண்டியதுதான். நிரம்ப பணத்தை ஸம்பாதிக்க வேண்டுமென்று அநாசார வழிகளில் பிரவேசிக்கக் கூடாது. பிராம்மணர்களுக்குத் தாரியத்திரியம் வேண்டியதுதான். கண்ட தேசங்களுக்குச் சென்று ஆசார அநுஷ்டானங்களை விட்டு விட்டு ஸம்பாதிக்காவிட்டால் ஒன்றும் முடியாது என்பது இல்லை. நம்முடைய மந்திர சக்தியைக் காப்பாற்றிக் கொண்டு நம்முடைய தர்மத்தை அநுஷ்டிப்பது முதல் கடமை. பணம் ஸம்பாதிப்பது இரண்டாவது தான்.

மந்திரசக்தி என்ற அக்கினியை நாம் காப்பாற்றிக் கொண்டு வந்தால் அது எல்லோருக்கும் க்ஷேமத்தை உண்டாக்கும். எல்லோருக்கும் கஷ்டம் வந்தால் நிவர்த்திக்கும் சக்தி இருக்க வேண்டும். யாராவது கஷ்ட காலத்தில் வந்து பிரார்த்தித்தால் ''நீ பண்ணுவதைத் தான் நானும் பண்ணுகிறேன். உனக்கு இருக்கிற சக்திதான் எனக்கும் இருக்கிறது.'' என்று சொன்னால் அவன் பிரார்த்தித்ததற்குப் பிரயோஜனம் இல்லை. மந்திர சக்தியாகிய அக்னி இப்பொழுது அணைத்திருக்கிறது. தேஹம் விகாரம்

ஆய்விட்டது. அசுத்தமான பதார்த்தங்கள் சேர்க்கப்படுகின்றன. ஆனால் ஒரு பொறி மட்டும் அணையாமல் இருக்கிறது. அதை விருத்தி பண்ண வேண்டும். அப்படிச் செய்தால் எப்பொழுதாவது பற்றிக்கொள்ளும். அந்த நெருப்புப் பொறிதான் காயத்ரீ. அது பரம்பரையாக வந்திருக்கிறது. மூன்று தலைமுறையாக காயத்ரீயை விட்டுவிட்டால் அவன் பிராம்மணனாக மாட்டான். அப்பேர்ப்பட்டவர்கள் இருக்கிற தெரு அக்கிரஹாரம் ஆகாது. அது குடியானவர்தெருதான். ஆனால் இன்னும் மூன்று தலைமுறை ஆகவில்லை. ஆகையால் இன்னும் பிராம்மணர்கள் என்று தான் நான் நினைக்கிறேன். மூன்று தலைமுறை யஜ்யம் இல்லாவிட்டால் அவன் துர்ப்பிராம்மணணன். மறுபடியும் பிராம்மணனாவதற்கு பிராயச்சித்தம் சொல்லப்பட்டிருக்கிறது. அனால் காயத்ரீயை மூன்று தலைமுறையாகவிட்டு விட்டால் பிராம்மணத்துவம் போய்விடுகிறது. அவன் மறுபடியும் பிராம்மணனாக மாட்டான். அவன் பிரம்மபந்துதான். அப்படியே க்ஷத்திரியன் காயத்ரீயை விட்டால் க்ஷத்திரிய பந்துவாகிறான். வைசியன் வைசிய பந்துவாகிறான். ஆகையால் அந்த நெருப்புப் பொறியை ஊதிப் பெரியது பண்ண வேண்டும். நெருப்புப் பொறி எதற்கும் உபயோகப்படாது. ஆனால் உபயோகப்படுவதற்கு ஆதாரம் இருக்கிறது. ஆகையினால் ஞாயிற்றக்கிழமையாவது ஆயிரம் காயத்ரி பண்ண வேண்டும். கண்ட இடத்தில் கண்ட ஆஹாரத்தை உண்ணலாகாது. இதுவரைக்கும் அநாசாரம் செய்ததற்குப் பிராயச் சித்தம் பண்ணிக்கொள்ள வேண்டும். இனியாவது கண்ட ஆஹாரத்தை உண்ணாமல் மந்திர சக்தி இருப்பதற்குத் தேஹத்தைப் பரிசுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு காலத்திலும் பத்து காயத்ரிகளையாவது பண்ண வேண்டும். மூன்று காலமும் சாந்தம் உண்டாகிற காலம். காலையில் பக்ஷி முதலிய பிராணிகளும் மனிதர்களும் எழுந்திருக்கும் காலம். அப்பொழுது மனது சாந்தியாக இருக்கும். ஸாயங்காலம் எல்லோரும் வேலையை முடித்து ஓய்ந்திருக்கும் காலம். அதுவும் சாந்தமான காலம். மத்தியான்ன காலத்தில் ஸூரியன் உச்சியில் இருக்கிறான். அப்பொழுது எல்லோரும் அயர்ந்திருக்கும் காலம். அப்பொழுதும் மனதுக்கு சாந்தமான காலம். இந்த மூன்று காலங்களிலும் காயத்ரீ, ஸாவித்ரீ, ஸரஸ்வதி என்று மூன்று பிரகாரமாகத் தியானம் செய்ய வேண்டும். காலை விஷ்ணு பிரதானமானது. மத்தியான்ன காலத்தில் பிரம்மரூபிணீயாகவும் ஸாயங்காலம் சிவரூபிணீயாகவும் தியானம்

செய்ய வேண்டும். இந்த மூன்றும் சேர்ந்தால் ஸமஷ்டி காயத்ரீ என்பார்கள். தனித் தனியாக வியஷ்டி காயத்ரீயும் உண்டு.

காயத்ரீயில் ஸகல வேத மந்திர சக்தியும் அடங்கியிருக்கிறது. எல்லா மந்திரங்களும் சக்தியைக் கொடுப்பது அதுதான். அதை ஜபிக்காவிட்டால் வேறு மந்திர ஜபத்திற்குச் சக்தி இல்லை. ஹிப்நாடிஸம் என்பதனால் பல காரியங்களைச் செய்கிறார்கள். மோஷத்துக்குப்போக உதவும் ஹிப்நாடிஸம் காயத்ரீ மந்திரம். ஆசையை அடக்கி ஜன்மம் எடுத்ததின் பலனை அடையச் செய்கிற ஹிப்நாடிஸம் காயத்ரீ. அது இப்பொழுது நெருப்புப் பொறி மாதிரி இருக்கிறது. லோக காரியங்களைக் குறைத்துக் கொண்டு அதை அதிகமாகச் செய்ய வேண்டும் என்ற விரதத்தை வைத்துக்கொண்டு சரீரத்தைப் பரிசுத்தமாக ரக்ஷித்து வரவேண்டும். அப்பொழுது தான் அந்தப் பொறியாவது அணையாமலிருக்கும்.

ஸந்தியா வந்தனத்தில் அர்க்கியமும் காயத்ரீயும் முக்கியமானவை. மற்றவைகளெல்லாம் அதற்கு அங்கமானவை. அசக்தர்களாயிருப்பவர்கள் அர்க்கியத்தைக் கொடுத்துவிட்டுப் பத்து காயத்ரீகளையாவது செய்ய வேண்டும். அந்த இரண்டுதானே முக்கியம், அவைகளை மட்டும் செய்து விடலாம் என்றால் வரவர அவைகளுக்கும் லோபம் வந்துவிடும். ஆகையால் அங்க புஷ்களத்தோடு செய்து வந்தால் முக்கியமானது நிற்கும். ஆபத் காலத்திலுங்கூட இவைகளைச் செய்து வரவேண்டும். பாரத யுத்தத்தில் ஜலம் அகப்படாமல் தூயியை வைத்துக் கொண்டு காலம் தவறாமல் அர்க்கியம் கொடுத்தார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

அஸ்தமன காலத்திலும், உதய காலத்துக்கு முன்புறம் உச்சிக் காலத்திலும் அர்க்கியம் கொடுக்க வேண்டும். இடைக்காட்டுசித்தர் என்று ஒருவர் இருந்தார். அவர் ஆடு மேய்த்தார். அவர், ''காணாமற் கோணாமற் கண்டு கொடு, ஆடுகாண் போகுது பார் போகுது பார்'' என்று சொல்லி இருக்கிறார். காணாமல் என்றால் ஸூரியனைக் காண்பதற்கு முன்பு என்பது அர்த்தம். அதாவது ஸூரியோதயத்திற்கு முன் காலை அர்க்கியம் கொடுக்க வேண்டும். கோணாமல் என்பதற்குத் தலைக்கு நேரே இருக்கும்பொழுது என்பது அர்த்தம். அதாவது ஸூரியன் மேற்கே போவதற்கு முன் உச்சிகாலத்தில் மாத்யான்னிக அர்க்கியம் கொடுக்க வேண்டும். கண்டு என்பதற்கு ஸூரியன் இருக்கும் பொழுது என்பது அர்த்தம், ஸூரியன் அஸ்தமிப்பதற்கு முன்பு மலைவாயில் இருக்கும்பொழுது

ஸாயங்கால அர்க்கியம் கொடுக்க வேண்டும். இந்த விஷயங்களை தான் இலேசாகச் சொல்லியிருக்கிறார். ஆடு என்றார் நீரோடு. கங்கையில் ஸ்நானம் பண்ணு என்பது அர்த்தம். காண் என்றால் ஸேது தரிசனம் பண்ணு என்பது அர்த்தம். போகுது என்றால் கங்கா ஸ்நானத்தாலும் ஸேது தரிசனத்தாலும் நம் பாபம் தொலைகிறது, இதைப்பார் என்று சொன்னார்.

காயத்ரீயைச் சரியாகப் பண்ணினால்தான் வேத மந்திரஸித்தி உண்டாகும். அர்க்கியத்தையும் காயத்ரீயையும் தவறாமல் செய்து கொண்டு வர வேண்டும். ஜன்மத்தில் ஒரு தரமாவது கங்காஸ்நானம், ஸேது தரிசனம் பண்ணுவேணும். ஸந்தியாவந்தனத்தைத் தவறாமல் செய்து வரவேண்டும். அங்க புஷ்களமாகப் பண்ணினால்தான் பிரதானமாவது நன்றாக இருக்கும்.

ஜ்வரம் வந்தால் கூட இருக்கிறார்கள் அவர்களுக்காக ஸ்ந்தியா வந்தனம். பண்ணித் தீர்த்ததை ஜ்வரம் வந்தவர் வாயில் விடவேண்டும். இப்பொழுது நமக்கு நித்தியப்படி ஜ்வரம் வந்தது போலத்தான் இருக்கிறது. ஜ்வரம் வந்தால் அதற்கு மருந்து அவசியம்; அது போல ஆத்மாவுக்கு உபயோகமான காயத்ரீயம் முக்கியமானது. அதை எந்தக் காலத்திலும் விடக்கூடாது. மருந்தைவிட அதுதான் முக்கியமானது. ஒரு நாளாவது ஸந்தியாவந்தனத்தைவிட்டு விட்டோமென்று இருக்கக்கூடாது. கண்டபடி அநாசாரம் பண்ணக்கூடாது. இதுவரையிலும் பண்ணின அநாசாரத்துக்குப் பிராயச்சித்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். காயத்ரீ ஜபம் பண்ணுவது எல்லோராலும் ஆகிற கார்யந்தான். ஆயுள் இருக்கிற வரைக்கும் ஸந்தியாவந்தனத்துக்கு லோபம் வராமல் பண்ண வேண்டும். காயத்ரீயை மாத்ருரூபமாக உபாஸிக்க வேண்டும். பகவான் பலவிதமான ரூபங்களில் வந்து பக்தர்களுக்குக் கிருபை செய்கிறார். நம்மிடம் எல்லாரையும் விட அன்பாக இருப்பது மாதா தான். தாயாரிடம் எதை வேண்டுமானாலும் பயமில்லாமற் சொல்லலாம். பகவான் எல்லா ரூபமாக இருந்தாலும் மாதா ரூபமாக வந்தால் நல்லது. காயத்ரீயை மாதாவென்று வேதம் சொல்லுகிறது.

புருஷனுக்குத்தான் காயத்ரீ இருக்கிறது. ஸ்திரீக்கு எந்தக் காயத்ரீ இருக்கிறதென்றால், புருஷன் காயத்ரீயை அநுஷ்டித்தால் ஸ்திரீகளுக்கு க்ஷேமம் உண்டாகும். அதனால் மற்ற ஜாதிகளுக்கும் க்ஷேமமுண்டாகும்.

பலவித மந்திரங்கள் இருக்கின்றன. அவைகளை ஜபம் பண்ணுவதற்கு முன்பு இன்ன இன்ன பலனை உத்தேசித்துப் பண்ணுகிறேன் என்று சொல்லுகிறோம். காயத்ரீ மந்திரத்தினுடைய பலன் சித்த சுத்திதான். மற்ற மந்திரங்களால் உண்டாகிற பலன்களெல்லாம் கடைசியில் சித்த சுத்தி உண்டாகத்தான் இருக்கின்றன. இதுவே காயத்ரீக்கு நேரானபலன்.

காயத்ரீ மூன்று வேதத்திலிருந்தும் எடுத்தது. அதனால் மூன்று வேதங்களைச் சேர்ந்தோர்களுக்கும் காயத்ரீ பொதுவானது. அதர்வ வேதத்துக்கு மாத்திரம் வேறு காயத்ரீ உண்டு. அந்த வேதத்தை அத்தியானம் பண்ணுகிறவர்கள் வேறு உபநயனம் பண்ணிக் கொண்டு வேறு காயத்ரீ உபதேசம் செய்து கொள்ள வேண்டும். அப்படியே அதர்வவேதி மற்றவேதங்களை அத்தியயனம் பண்ண வேண்டுமென்றாலும் மறுபடியும் உபநயனம் செய்து கொள்ள வேண்டும்.

இந்தக் காலத்தில் காலையிலும் யற்காலத்திலும் எல்லாரும் காலந்தவறாமல் ஸந்தியாவந்தனம் செய்யலாம். சீக்கிரம் ஆபிஸூக்குப் போக வேண்டியர்கள் கௌண காலத்தில் காலை ஸந்தியாவந்தனம் செய்ய வேண்டும். மாத்யான்னிக அர்க்கியத்தை ஸாயங்காலாத்திலவது கொடுக்க வேண்டும். ஜ்வரம் வந்தால் மற்றவர்களிடம் கஞ்சி கொடு, தீர்த்தம் கொடு என்று சொல்லுவதைப் போல எனக்காக ஸந்தியாவந்தனம் பண்ணு என்று சொல்ல வேண்டும். ஆஹாரத்தில் நியமமாக இருக்க வேண்டும் அசுத்தமான ஆஹாரத்தைச் சாப்பிடக் கூடாது. அசுத்தமானவர்களோடு சாப்பிட கூடாது. அவர்களை நாம் தூஷிக்க வேண்டாம். வெறுக்கவும் வேண்டாம். நாமாக நம்மை விலக்கிக் கொள்ள வேண்டும். அவர்கள் இருக்கும் பந்தியில் உட்கார்ந்து சாப்பிடக்கூடாது. இவ்வளவும் நம்முடைய தேஹபரிசுத்தியை ரக்ஷிப்பதற்காகத்தான் ஏற்பட்டவை. தேஹபரிசுத்தியைக் காப்பாற்றினால்தான் மந்திர சக்தி இருக்கும். அப்பொழுதுதான் நமக்கும் மற்றவர்களுக்கும் க்ஷேமம் உண்டாகும். மந்திர சக்தியானது அணையாமல் விருத்தியாகக்கிருபை செய்ய வேண்டுமென்று பகவானை எல்லோரும் பிரார்த்திப்போமாக !



## காஞ்சி மாமுனிவர்

## ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய மஹாஸ்வாமிகள் அருளிய

## பொன்மொழிகள்

குருபக்திக்கு எடுத்துக்காட்டாக விளங்குபவர்கள் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரியார் சுவாமிகள். இவர்களது சமய தொண்டும் சமுதாயத் தொண்டும் உடன் ஆற்றும் உயர் தவப்பேறு. ஸ்ரீ சங்கரர் போல இவர் 'துவாதஸ லிங்க க்ஷேத்ரங்கள்' எனப்படும் பன்னிரண்டு ஜோதிர்லிங்க க்ஷேத்ரயாத்ரை செய்தவர்கள். ஸ்ரீ கயிலாய விஜயத்தை நிறைவுறுத்தியவர்கள். ஸ்ரீ சங்கர விஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சரியார் சுவாமிகளைத் தம் பிரதம சிஷ்யராகப் பெற்றவர்கள்.

உள்ளத்தில் சக்தியும் சின்னத்தில் சிவசின்னமும் நாவில் விஷ்ணுவும் (உச்சரிக்கும் போது) வைத்திருப்பவரே உண்மையான இந்து ஆவார். அவரே உலகத்தின் குருவும் ஆவார்.

பரம்பொருள் ஒன்றுதான். விநாயகரும் முருகனும் அம்பாளும் விஷ்ணுவும் அனைத்து மூர்த்தங்களும் பரம் பொருள் ஈசனின் கூறுபாடுகள்.

ஈசன் ஒருவனே என்று ஏற்றுக்கொண்டுள்ள மதம் இந்து மதம். இந்து மஹா சமுத்திரம் போன்ற இந்த தர்மத்தைக் கடைபிடி. இன்பமாக வாழ்வாய்.

விடியும்முன் எழுந்து யோகாசனம் செய்து உடலைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். நாமாவளி சொல்லி உள்ளத்தை தூய்மைபடுத்திக் கொள்ள வேண்டும்.

நீதி போதனைகள் வரலாற்றுச் சம்பவங்களைக் கேட்டு ஆன்மாவைத் தூய்மைப்படுத்த வேண்டும்.

ஆலயங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டு முன்னோர்களின் முயற்சியினை வியந்து எண்ணத்தைத் தூய்மைப்படுத்த வேண்டும்.

ஒருவரோடு ஒருவர் கலந்து பேசி, அச்சத்தை போக்கி பொறாமையைப் பொசுக்கித் தீய எண்ணங்களை விட்டு ஆன்மீகத் துறையில் பற்று ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

நம் பாரத நாட்டில் ஈஸ்வரன் இருக்கும் கயிலாயம் இருக்கிறது. பனிமூடிய உயர்ந்த இமயமலை இருக்கிறது. கங்கை, யமுனை, கோதாவரி, காவிரி போன்ற பல புண்ணிய நதிகள் ஓடுகின்றன.

ஸ்ரீராமன், கண்ணன், நாயன்மார்கள், தவத்தில் சிறந்த முனிவர்கள் அவதாரம் செய்த பூமி இந்தப் பாரத பூமி.

பாரத பூமியில் தூய எண்ணமுடையவர் எண்ணியது எய்துவர் நினைத்ததை முடிப்பார்கள்.

மனிதனுக்கு வாழ்வில் இரண்டு கோட்பாடுகள் வேண்டும். ஒன்று மனத்தூய்மை. மற்றொன்று மன அமைதி. இந்த இரண்டும் பெற நல்ல எண்ணம் வேண்டும்.

மனிதன் நல்லவனாக வாழ வேண்டும் என்று தான் சமயங்கள் தோன்றி இருக்கின்றன. சிலர் சமயத்தை வாழ வைக்கிறேன் என்கிறார்கள். சமயங்கள் தான் மனிதனை வாழ வைத்து கொண்டிருக்கிறது.

கடவுளை ஏன் கும்பிட வேண்டும் என்கிறார்கள். மனிதன் மனிதனை நம்பினால் துன்பத்தைத்தான் சுமக்க வேண்டும். இறைவனைத் தூய்மையான மனதோடு வணங்குங்கள். துன்பம் அகன்று இன்பம் பெறுவீர்கள்.

எவன் ஒருவன் கடவுளைத் தூஷிக்கிறானோ அவனுக்கு ஒரு மடங்கு பாவம். ஆனால் அதை கேட்பவனுக்கோ இரு மடங்கு பாவம்.

யார் நமக்கு வாழ்க்கையில் நல்லதை செய்து நல்லதைக் கொடுத்து வழிகாட்டியாக இருக்கின்றாரோ அவரே ஜகத்குரு. அப்படி வந்தவர் ஸ்ரீ கிருஷ்ண (பரமாத்மா) பகவான்.

வேத பாராயணம் பஜனை கடவுள் துதி முதலிய வகைகளை நாம் நிறைய செய்ய வேண்டும். பக்தி நமது வழக்கத்தில் முக்கியமாக இருக்க வேண்டும்.

ஆன்மாவின் உண்மை ஞானம். உண்மை தன்மையை அறிந்து கொள்வதற்கு ஒரு சாதனமாக இறைவழிபாடு உருவ வழிபாடு அமைகிறது.

ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய ஆன்மீக முன்னேற்றத்திற்காக காலை மாலை 6 மணிக்கு சூரியனை நமஸ்கரிக்க வேண்டும்.

தர்மோ ரக்ஷதி ரக்ஷதி : அறம் காத்தவனை அறம் காக்கும்.

சரணாகத ரக்ஷக ஆபத்பாந்தவ என்ற மந்திரத்தை காலை மாலை இரண்டு வேளைகளிலும் பதினாறு முறை ஜபிக்க வேண்டும்.

ஆண்டவனுக்காக ஒருமுறையும், நம் முன்னோர்களுக்காக ஒருமுறையும் நம்மைவாழ வைத்தவர்களுக்காக ஒரு முறையும் ஆக மும்முறை இரண்டு கைகளிலும் ஜலம் எடுத்து மூன்று முறை அர்க்யம் விட வேண்டும்.

ஈன்ற தாய் மனம் நொந்தால் தெய்வ அருள் சிறிதும் கிடையாது.

இறைவனிடம் மனம் ஈடுபடுவதைப் பொறுத்து விதியின் கொடுமை குறையும்.

நமது அன்றாட வாழ்க்கையில் ஆடம்பரம் புகுந்து கொண்டு எளிமையை அப்புறப்படுத்திவிட்டது அழிவில்லாத ஆத்மா நமக்கு இருக்கிறது.

அதன் வளர்ச்சிக்குப் பாடுபடாமல் அழிந்து போகக் கூடிய உடம்பைத் திருப்தி செய்வது பற்றி எப்போதும் எண்ணமிட்டுக் கொண்டு இருக்கிறோம்.

மனதையும் துன்மார்க்க வாழ்க்கையும் ஒழுங்குபடுத்துவதே தபஸ். இந்த தபஸ் என்பது இப்பொழுது பொருளில்லாத சொல்லாகிவிட்டது.

ஆத்ம சக்திக்கு வேர்கள் போன்றவை, ஒழுங்குக்குட்பட்ட மனமும் சன்மார்க்க வாழ்க்கையும்.

நம் ஒவ்வொருவரிடத்திலும் ஆத்மா என்பதொன்று இருக்கிறது. அதுதான் அநித்யமான சரீரத்திற்குள் சரீரியாக இருந்து நம்மை இயங்க வைக்கிறது.

மண் கரையும், மணல் கரையாது. சாமான்ய மனிதர்கள் உலகோடு கலந்து விடுவர். ஆத்ம ஞானிகள் உலகிலேயே இருந்தாலும் ஒட்டாமல் இருப்பார்கள்.

சூரியன் உதித்தால் எப்படித் தாமரை மலர்கின்றதோ அதுபோல கடவுள் நினைப்பு இருந்தால் நம் மனத்தாமரை ஆனந்தத்துடன் மலர்ந்து இருக்கும்.

தாமரை தண்ணீரில் இருந்தால் செழிப்புற்று இருக்கும் அதே போல நமது மனம் கருணை (அன்பு) என்னும் குளத்தில் இருந்தால் சாந்தமாக இருக்கும்.

தாமரைப் பூ எப்படி நல்லவாசனையுடன் திகழ்கிறதோ அதுபோல நம் மனமும் நல்லபடி திகழ வேண்டும். விநாயகரை முக்கியமாகப் ப்ரணவ ஸ்வரூபமாக வணங்கினால் நன்மைகள் பல உண்டாகும்.

வீரமும் சூழ்ச்சியும் தற்காலிக வெற்றி தேடும் உபாயங்கள். நிலையான அழிவில்லாத வெற்றிக்கு தர்மமே முக்கிய சாதனம்.

நாட்டிற்குத் தொண்டன் என்று பெருமை பாராட்டிக் கொள்வதை விடத் தன்னுடைய குடும்பத்திற்குத் தொண்டு செய்து அதுவே உன்னதப் பணி.

முயற்சி உள்ள இடத்தில் இறைவனும் அருள்வான். ஒவ்வொரு நிமிடத்தையும் பயனுள்ள காரியங்களுக்குப் பயன்படுத்த வேண்டும்.

எங்கே தூய்மையும் ஒழுக்கமும் இருக்கிறதோ அங்கே லக்ஷ்மி தேவி தாண்டவமாடுவாள்.

பெண்கள் கண்ணீர் சிந்துவதையும் பசுக்கள் ரத்தம் சிந்துவதையும் நிறுத்தினால் நாடு சுபிக்ஷமடையும்.

காதில் தோடு மூக்கில் மூக்குத்தி கையில் வளையல் காலில் மெட்டிகள் முதலியவை அணிகலன்களாக இருந்தாலும் மங்கலப் பொருளாகச் சொல்லப்படுகிறது.

மஞ்சள் குங்குமம் என்பது அம்பாளின் சின்னம். பெண்கள் மஞ்சள் குங்குமம்தான் இட்டுக் கொள்ள வேண்டும்.

ஒரு கையில் வளையல் மற்றொரு கையில் கடிகாரமும் கட்டிக் கொள்கிறார்கள். அதனால் பல சௌர்கயங்கள் இருந்தாலும் மங்கலம் பெறுவதில் அரைப்பங்கு குறைந்து விடுகிறது.

வினைப்பயனாய் வரும் துன்பம் ஒருமுறை நாமே பல செயல்கள் மூலம் வரவழைத்துக் கொள்ளும் துன்பம் மற்றொரு முறை.

தாலி என்பது ஒரு மங்கலப் பொருள், அதை அணிகலன்போல எடுத்து மாட்டி வைப்பதென்பது சரியல்ல. விவாகம் என்பது அக்கினி சாட்சியாக நடக்கக் கூடிய ஒரு புனிதமான செயல். வெறும் உடல் சுகத்திற்காக மாத்திரம் விவாகம் என்பது அல்ல.

தனக்கும் தன் குடும்பத்திற்கும் இடையூறு வராத நிலையில் வீட்டில் உள்ள பெண்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

இன்று குழந்தைகள் கேட்பதை எல்லாம் தாய் தந்தையர் கொடுத்து அல்லற்படுவது போலன்றிக் கடவுள் நமக்குத் தேவையானதை மட்டும் தந்து அமைதியாக வாழ வழி செய்கிறார்கள்.

கேட்பதென்பது மனிதனது உரிமை. கொடுப்பதென்பது இறைவனுடைய தன்மை. கிடைத்ததைக் கொண்டு திருப்தியுடன் வாழ்வது தான் மனித வாழ்வின் பூரணத்வம். இதைப் பெற இறைவன் அருளைப் பெற நல்லமுறையில் வளர்த்து வெற்றி பெற்றாக வேண்டும்.

நல்ல வழியில் செல்வதைத் தெய்வசேஷ்டை என்றும் கெட்ட வழியில் செல்வதை அசுர சேஷ்டை என்றும் கூறுவர். புத்திக்கு அப்பாற்பட்ட சக்தியை நினைத்து அதன் மூலம் வரும் இன்பமே பேரின்பமாகும்.

சர்வ துக்கத்தையும் போக்குவதற்குச் சதா ஈச்வரனையே நினைத்தால் மனதுக்குச் சாந்தி ஏற்படும்.

மனதைப் பகவானின் திருவடியிலும், வாக்கைத் துதிப்பதிலும் கைகளைப் பூஜை செய்வதிலும் காதுகளை அவன் குணங்களை கேட்பதிலும் ஈடுபடுத்த வேண்டும்.

மனதுக்கு இரண்டு நிலைகள் உண்டு. பிரேமை ஏற்பட்டால் மனம் மிகவும் மெல்லியதாக இருக்கும். துயரம் ஏற்பட்டால் கடினமாக இருக்கும்.

என் மனம் மெல்லியதாக இருந்தால் பகவானுக்குப் பாதுகை ஆகட்டும். கடினமாக இருந்தால் பரமேஸ்வரன் திருமணத்தில் அம்மிமிதிக்கும் கல்லாகட்டும் என்று உருகிப் பக்தி செய்யணும்.

பெண்கள் தம் வாழ்க்கையில் கௌரியைப் போலத் தன்னையே தன் கணவனுக்கு அர்ப்பணிக்க வேண்டும். சீதையைப் போல நிழல் எனத் தொடர்ந்து ராதையைப் போல பக்தியும் அன்பும் வைக்க வேண்டும் என்று மங்களப் பாட்டு உணர்த்துகிறது.

தனக்கும் தன் குடும்பத்திற்கும் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் முறையிலேயே பெண்கள் வாழ வேண்டும்.

அன்னம் சுத்தமானால் எண்ணம் சுத்தமாகும். நம்முடைய மனம் சுத்தமாக இருக்க வேண்டுமானால் நாம் உண்ணும் உணவும் தூய்மையாக இருக்க வேண்டும்.

ஸ்வயம் பாகி (நாமே சமைத்து சாப்பிடுவது) தன்னால் சித்த சுத்தி பெற்று உத்தமமான பண்புகள் ஸித்தித்து விடுகின்றன.

இன்று மக்களின் மனம் பல தவறான வழிகளில் சென்றிருப்பதற்குத் தூய்மைக் குறைவான உணவு ஒரு முக்கிய காரணம்.

சீரிய சிந்தனையும் ஸத்வகுண வளர்ச்சியும் பெறும் பொருட்டு ஸாத்விக உணவுப் பழக்கத்தை மேற்கொள்ள வேண்டும்.

தாமரைக்குளத்தில் தண்ணீர் ஜில் என்றிருப்பது போல நம் மனமானது கடவுள் நினைப்போடு இருந்தால் எப்பொழுதும் சாந்தமாக குளுமையாக இருக்கும்.

ரோஜாப்பூ எப்போதும் மலர்ந்த நிலையிலேயே இருக்கும். அதே போல மகான்களுடைய மனசும் எப்போதும் மலர்ந்த நிலையிலேயே இருக்கும்.

உன்னுடன் எப்போதும் உன்னை விட்டுப் பிரியாமல் இருப்பது நீ செய்த நல்வினை தீவினைகளே.

எப்போதும் சந்தோஷமாக இருக்கக் கடவுள் வழிபாட்டையும் தர்ம காரியங்களையும் நிறையச்செய். அதுவே நீ மேன்மையடையும் வழியாகும்.

சமுத்திரம் என்றாலே பெரிய அலைகள், மீன்கள், முதலைகள் இருக்கும். வாழ்க்கை என்றாலும் சுகம், துக்கம் பெரியதும் சிறியதும் எல்லாம் இருக்கத்தான் இருக்கும்.

கோவில் என்பது தனிமனிதனின் சொத்தல்ல, தேசத்தின் சொத்து.

மனித குலத்துக்கு உய்யும் வழிகாட்டிய சங்கரர், ராமானுஜர், மத்வர் போன்ற மகான்களைப் பகவான் கலியுகத்தில் அனுப்பி வைத்தார்.

பகவானை அடைவதற்கு இரண்டு வழிகள் உண்டு. ஒன்று கடவுளிடம் பக்தி செய்வது மற்றொன்று கடமையைச் செய்வது.

வேதம், ஸ்ருதி புராணம் மூன்றும் நமக்கு வழிகாட்டிகள்.

கடமையைச்செய்வதுடன் ஆண்டவனிடம் பக்தியும் செலுத்தினால் பகவானுக்கு நம்மிடம் கருணை உண்டாகும்.

கடவுளுக்கு நிவேதனம் செய்வது என்பது, கடவுள் முன்னால் வைவேத்தியத்தை வைப்பது. அதாவது பகவானுக்குத் தெரிவிப்பது.

பாமாயிலினால் விளக்கு ஏற்றக்கூடாது. தேங்காயெண்ணையும் கூடாது. நல்லெண்ணெயில் தான் வீடு ஆலயங்களில் விளக்கு ஏற்றவேண்டும்.

பள்ளிப் பருவத்திலிருந்தே சூரிய வழிபாடும் சூரிய நமஸ்காரமும் செய்ய வேண்டும். அதனால் உடல் வலிமையும், கல்வியில் ஞானமும் வரும்.

தினமும் தருமம் செய். பணம் இல்லாவிட்டால் பத்து காசு கூடத் தருமம் செய்யலாம். நம் சக்திக்கு உட்பட்ட தருமம் ஏதுவானாலும் நல்லதே.

மனச்சஞ்சலம் இருக்கும் போது தெய்வ தோத்திரங்களைச் சொல்ல வேண்டும். ராமநாமத்தை ஒரு நோட்புக்கில் எழுதலாம், மனம் சாந்தி அடையும்.

ஒவ்வொரு பெண்ணும் தங்கள் தாய் தகப்பன் தங்களுக்குக் கல்யாணம் செய்தபோது பட்ட கஷ்டத்தை நினைத்துக் கொண்டால் வரதட்சணைப் பிரச்சனை எழாது.

பாரதம் தெய்வீகமும் கலாச்சாரமும் நிறைந்த பசுமையான நாடு. இந்த நாடு செழிப்பாக இருந்தால் தெய்வீக மணம் பெற முடியும்.

புலவர், ஆசிரியர் நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு உழவர். உங்களிடத்தில் வரும் மாணவன் களர் நிலம் மாதிரி.

களர் நிலத்தைப் பயன்படுத்தி நல்ல விளை நிலமாகச் செய்ய வேண்டிய பொறுப்பு ஆசிரியரைச் சார்ந்தது.

இளம் சிறுவர் நெஞ்சங்களில் கல்லூரி மாணவர் உள்ளங்களில் இந்து மதத்தின் பெருமையைச் சொல்லிப் பதிய வைக்க வேண்டும்.

இளமைப் பருவம் கிடைத்தற்கரிய பருவம். அந்தப் பருவத்தில் நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கத்தை விதைக்க வேண்டும்.

பக்தி, கடவுள், பற்று, பெரியோர்களுக்கு கீழ்ப்படிதல் போன்ற விளைச்சலை அறுவடை செய்ய வேண்டும்.

ஆலமரத்தின் நிழல் அனைவருக்கும் வெயிலின் தாபத்தைப் போக்கடிக்கும், அதுபோல இந்து சமயம் மக்களுடைய தாபத்தைப் போக்கும்.

இறைவனுடைய சக்தி பெரிய உலகைப்படைத்துப் பல ஆயிரக்கணக்கான ஜீவாத்மாக்களாக ஆகி பல வழிகளில் இறைவனை அடைய வழி சொல்லிக் கொடுக்கிறது.

இந்து சமயத்தில் இருந்த பெரியோர்கள் அருளிய தத்துவமே வெவ்வேறு சமய மார்க்கமாக அமைகிறது.

நம் நாடு சுதந்திரம் பெறுவதற்கு முன், நம்மிடம் இருந்த பண்பு, குணம், கட்டுப்பாட்டு உணர்வு நம்மை உயர்த்தின.

ஆனால் தற்போது நாம் வெகு தூரம் விலகி வந்திருக்கிறோம்.

நம்நாட்டின் எந்த நிலையை எடுத்துக் கொண்டாலும் அவற்றில் கலாச்சாரம், பண்பாடு, தெய்வீகம், ஆன்மீகம் ஆகியவை கலந்தே காணலாம். இதுவே நம் நாட்டின் தனி சிறப்பு.

வெறும் கண்களால் கடவுளைக் காண முடியாவிட்டாலும், மின்சாரத்தில் விளக்கு எரிவதன் மூலம் அறிவது போலக் கடவுளின் அருளை நாம் உணர முடியும்.

நம்முடைய கஷ்டங்களுக்காக நாம் கடவுளைக் குறை கூறக்கூடாது. நம் மனோதிடம், சூழ்நிலை கடவுளிடம் பக்தி இவற்றின் மூலம் கஷ்டத்தைக் குறைக்கலாம்.

குழந்தைகளுக்கு நல்ல பழக்கங்களை சொல்லி கொடுக்க வேண்டிய அவசியமில்லை. நாம் எதை செய்கிறோமோ அதை நன்றாகக் கவனித்துக் குழந்தை செய்ய ஆரம்பித்துவிடும். கற்பூரம் மட்டும் நன்றாக இருந்தால் போதாது. அதை பற்றவைக்கும் தீக்குச்சியும் சிறப்பாக அமைய வேண்டும். அது போல ஆசிரியர்களும் சிறந்தவர்களாக திகழ வேண்டும்.

ஆசிரியர் தொழில் என்பது ஓர் உத்தியோகம் மட்டுமன்று. சமுதாய நலச்சேவையும்கூட. ஒரு நல்ல சமுதாய வளர்ச்சிக்கு ஆசிரியர் தொண்டு அவசியம்.

இந்து சமய அறநூல்களில் மனைவியோடு வாழும்போதுதான் எல்லாவித அறங்களையும் செய்யத் தகுந்தவனாகிறான் என கூறப்பட்டு உள்ளது.

புராணங்களை ஆழ்ந்து படித்தால் கணக்கு சரித்திரம் பூகோளம் தற்கால விஞ்ஞானம் எல்லாம் பொதிந்து கிடப்பதை அறியலாம்.

சானை தீட்டிய கத்தியை நல்ல முறையில் ஜாக்கிரதையாக பயன்படுத்த வேண்டும். அதுபோல் நல்ல விஷயங்களை கற்றவன் நல்ல முறையில் புத்தியை உபயோகிக்க வேண்டும்.

எல்லாரும் சமமாக வாழ ஏழைகளிடமும், அனாதைகளிடமும் அன்புகொண்டு அவர்கள் கஷ்டத்தைப் போக்குவதில் பங்கு கொள்ள வேண்டும்.

அறிவு என்பது உண்மை அறிவு. தோற்றித்தின் அறிவு (பொய்யறிவு) என இரு வகைப்படும். உண்மை அறிவு வந்து விட்டால் இரண்டு என்ற எண்ணம் போய் விடும்.

நாமும் துன்பப்பட்டுப் பிறருக்கும் துன்பத்தைக் கொடுப்பது, மறு பிறவியிலும் துன்பத்தை அழைப்பதற்கு காரணமாகிறது.

தீயகுணங்களையும், அதனால் விளையக் கூடிய துன்பங்களையும் அறிந்து ஆண்டவனிடம் தீயகுணங்களை அகற்ற வேண்டும் என பிரார்த்தனை செய்ய வேண்டும்.

உலகத்திலேயே பரிபூரண ஆனந்தமாக ஒரு கவலையும் இல்லாமலிருப்பது பரம் பொருள் ஒன்றுதான்.

பாவங்களைச் செய்தவன் அதைப் போக்கப் புண்ணிய தலங்களுக்குச் சென்று வந்தால் பாவங்களின் சக்தி குறையும்.

கரும்பின் ரசம் இனிப்பு, கரும்பை கடிக்கும் போது பல்வலி துன்பம் ஏற்படுகிறது. கரும்பு போல மனது என்பதை உணரத்தான் கரும்பு எனக் கூறுவதுண்டு.

இந்து சமயம் அனுபவ மூலமாக "வீட்டின் பழக்க வழக்கத்திலேயே வளர்ந்து வந்தது. இந்து மதம் வாழ்க்கையுடன் ஒட்டிய மதம்.

எந்த வேலை எவ்வளவு நேரம் செய்தாலும் அதை இறை நலத்துடன் செய்வதற்கு நம் இந்துமதத்தில் சொல்லி கொடுக்கப்படுகிறது.

மாதா பிதா குரு தெய்வம் என்ற நான்கு பேரையும் நாம் வணக்கத்திற்கு உரியவர்களாக கொள்ள வேண்டும்.

நம்மையும், நம் ஆன்மாவையும் மேம்படுத்துபவர் குரு. குரு அனுக்ரஹம் நமக்கு கிடைக்காவிடில் அந்த வாழ்க்கையே பயனற்றுப் போகும்.

குருபக்தியை வாழ்க்கையில் இருந்து பிரித்துவிட முடியாது. குரு பக்தியை விடச் சிறந்த நன்றிக் கடன் கிடையாது.

பவழம் என்பது விலை மதிக்க முடியாத பொருள். நம்முடைய பெரியவர்கள் நமக்கு பவழமாக இருக்கிறார்கள். குரு உபதேசப்படி நடந்து கொள்ள வேண்டும்.

மகாபாரதமும் ஸ்ரீமத் இராமாயணமும் மக்களுக்கு இரண்டு கண்கள் போன்றவை. அவற்றில் மனித வாழ்க்கைக்கு தேவையான பல நீதிகள் உள்ளன. இறைவனை சரணாகதி அடைந்தால் எல்லா நன்மைகளும் உண்டாகும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறான் விபீஷணன்.

நமது பக்திக்கு வழி அமைத்து இஷ்டஸித்தியை பூர்த்தி செய்து கொள்ள மூர்த்தங்களையும் ஆலயங்களையும் அமைத்து உள்ளனர்.

ஆலயம் நமது உயிருக்கு உயிர், ஆதலால் ஆலய நலனில் அனைவரும் அக்கறை கொண்டு மேலான நலன்களைப் பெற வேண்டும்.

நல்ல பழக்கவழக்கங்கள், சூழ்நிலை, நல்லவர்களின் நட்பு, நல்ல நூல்களைப் படித்தல் போன்றவற்றை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

குங்குமம் உலகிற்கெல்லாம் தாயாக விளங்கும் பார்வதியினுடைய உருவத்தை நினைவூட்டுகிறது. குங்குமம் சௌபாக்யத்தை, தீர்க்காயுளைக் கொடுக்கிறது.

எந்த இடத்தில் யாருடைய நெற்றியில் குங்குமம் பிரகாசிக்கிறதோ அங்கு தரித்திரம் இருக்காது.

எல்லா பொருட்களையும் அறியும் வாய்ப்பு எப்போது ஏற்படுகிறதென்றால் எங்கும் ஸ்வர உதயமாகி ப்ரகாசம் ஏற்படும் போது. அந்த உதயம் ஏற்பட அனைத்திற்கும் காரணமாக கடவுளை நாம் அறிய வேண்டும்.

கடவுளுக்கு தூக்கமோ, கவலையோ மன வருத்தமோ ஒன்றும் கிடையாது. அவருடைய ஸ்வரூபத்தை பரிபூரணமாக அறிந்து கொள்வதனால் நாமும் அவராகவே ஆக முயற்சிப்போம்.

பிறருக்கு உபகாரமாயிருப்பது புண்யமான நல்ல செயல். பிறருக்கு கெடுதல் செய்ய நினைப்பது மிகவும் பாவமான செயல்.

ஒரு மரத்தின் அடிவேர் ஈரப்பசையுடன் நன்றாக பூமியில் பதிந்து காக்கப்பட்டு வந்தால் பழம் காய் என செழிக்கும்.

அது போல அழுத்தமான திடகடவுள் பக்தி இருந்தால் இந்து சமுதாயமே மருமலர்ச்சியில் திகழும்.

தான்வேறு ஈஸ்வரன் வேறு என்ற எண்ணம் நீங்கி பரம்பொருளை அறிந்து அத்துடன் ஒன்றுதல் வேண்டும்.

"ராம நாமா" எங்கெல்லாம் (சொல்ல) ஸ்மரிக்கப்படுகிறதோ அங்கெல்லாம் ஆஞ்சநேய ஸ்வாமியினுடைய அனுக்ரஹம் பூர்ணமாக இருக்கும்.

வாழ்க்கையில் நல்ல நிலையை அடைய வேண்டுமென்றால் ஆஞ்சநேயரை உதாரணமாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

பக்தி சேவை செய்வது வீரம் எடுத்துக்காட்டு ஆஞ்சநேயர்.

நல்ல காரியத்தில் எவ்வளவு நம்பிக்கையும் முயற்சியும் செய்து வருகிறோமோ அதுபோல அதனுடைய பலனும் தானாகவே நம்மை வந்தடையும்.

மகாபிரதோஷம் என்பது விளக்கு வைத்த சந்தியா நேரத்திலே திரயோதசி திதி என்று இருக்குமோ அன்றைய தினம் மகாபிரதோஷம் எனப்படும்.

சனிப்பிரதோஷம் மிகவும் விசேஷமான நாள். பார்வதியும், பரமேஸ்வரனும் இரண்டற்ற வடிவமாக விருஷப வாகனத்தில் காட்சி கொடுக்கும் நன்நாள்.

இறைவன் எப்படி அழிவது இல்லையோ அதுமாதிரி சமஸ்கிருதமும் ஒரு நாளும் அழியாது. உலகம் உள்ளவரை இருந்து கொண்டே இருக்கும்.

உடலை விட்டு உயிர் பிரிந்த பின்னரே தேகபந்தம் விடும் என்று கொள்ளத் தேவையில்லை. பல ஞானிகள் உயிருள்ளபோதே தேக பந்தம் நீங்கி முக்தர்களாக இருந்து உள்ளார்கள்.

குருவிடம் மாறாத பக்தி கொண்டு அவர் அருள் பெற்றவன் குருவின் கடாட்சத்தால் அஞ்ஞான இருள் அகன்று மனமடங்கி அவன் எதிலும் கலக்கமுறுவதில்லை.

ஞானத்தால் பந்தத்திலிருந்து விடுபட்ட ஜீவன் முக்தனுக்கு உண்பதும், உறங்குவதும் பேசுவதும் மற்றதும் இயற்கை நிகழ்த்துகின்ற செயல்.

வேதம் ஒலி வடிவானது. அதுவும் அநாதி என்றும் ஒலி வடிவில் ஆகாயத்தில் நிலைத்திருக்க கூடியது.

ஆத்ம ஞானம் ஏற்பட நான்கு சாதனங்கள் உண்டு. 1. விவேகம் 2. வைராக்கியம், 3. சமம் முதலிய நான்கு குணங்கள் 4. முக்தி பெறுவதில் மிகுந்த ஆர்வம்.

பகுத்தறிவை மனிதன் பயன்படுத்தித் தவிர்க்கத் தக்கதைத் தவிர்த்து நல்லதைக் கடைப்பிடிப்பதால் உயர்ந்தவன் ஆகிறான்.

மனிதன் தன் வினையால் மற்ற உயிரினத்தில் பிறக்க முடியும். நல் வினையால் மனிதனாக, பிறந்து நல் முயற்சி தவம் செய்த பிறவாத நிலையும் அடைய முடியும்.

மனிதன் முழுமையாகத் துக்கம் நீங்கவும், நிலைத்த சுகம் பெறவும் ஆன்மீக வாழ்க்கை முறையையும் ஈசுவரவழிபாட்டையும் நாட வேண்டும்.

சுகம் என்பது மனம் அடங்கி ஒரு நிலைபடுவதால் ஏற்படுகிறது. ஆத்மாவிடம் ஈசுவரனிடத்தில் மனம் லயமடைவதால் அந்த பரமானந்தம் ஏற்படுகிறது.

ஈசுவரனின் திருவடி தியானத்தில் லயித்து பரமானந்தத்தை பெறுவதுதான் மனித வாழ்க்கையின் லட்சியம்.

இந்த கண்ணின் ஆற்றலை உட்புறம் திருப்ப மனம் உள்நோக்கி பாய ஸம்ஸாரபந்தம் விலகுகிறது. அதற்கு குரு சரணங்களில் பக்தி உதவுகிறது.

ஆத்மா சச்சிதானந்த ஸ்வரூபம் ஸத்—எப்போதும் நிலைத்திருக்கக் கூடியது. சித்—அறிவு மயமானது. ஆனந்தம்—துக்க கலப்பு இல்லாதது.

விவேகம் என்பது பகுத்தறிவு ஒவ்வொன்றையும் அறிவால் பகுத்து வேறுபடுத்தி அதனதன் உண்மை நிலையை அறிவதே பகுத்தறிவு.

வைராக்கியம் என்பது பற்றின்மை எதனையும் தேவையான அளவில் ஏற்பது என்று கட்டுப்படுத்தினால் பற்று குறையும்.

கடவுள் ஒளிவடிவானவர் என்பதை நமக்கு நினைவூட்டுவதே திரு கார்த்திகை திருநாள் திருவிளக்கு வழிபாடு பெண்களுக்கு உரித்தானது.

கேணி நீரை ஒரு பாத்திரத்தில் எடுத்து நாம் அருந்தி தாகம் தீர்ப்பது போன்று அருட்பெறும் ஜோதியாகிய தெய்வத்தின் திருவருளை திருவிளக்கில் ஏற்றி வழிபட வேண்டும்.

நம் வீட்டு நலமும் நாட்டு நலமும் வளர நம் இல்லங்களிலும் ஆலயங்களிலும் ஒன்று கூடி திருவிளக்கு வழிபாடு நடத்த வேண்டும்.

மனித வாழ்க்கையில் அடைய வேண்டியது துன்பக் கலப்பில்லாத அகண்ட பரிபூரண ஆனந்தம். அதை இறைவனடியில் பக்தி செய்து பெற வேண்டும்.

நம்முடைய தாய், நம் குருபத்னி, நம் சகோதரர்கள் மனைவி, நம் மனைவியின் தாய், பசு, பூமாதேவி ஆகியோரைத் தாயாக நினைக்க வேண்டும்.

நல்ல விஷயங்களைப் படித்திருந்தும் தவறான வழியில் வாழ்க்கையை நடத்துபவன் குருடன்.

எது நமக்குச் சத்ரு? கோபம் நமக்குச் சத்ரு, அதனால் அனைத்து புண்ய பலன்களும் விலகும்.

புலன் அடக்கமில்லாமையினாலும் முன்ஜன்ம வினையினாலும் தற்போதுள்ள சூழ்நிலையினாலும் ஆபத்துக்கள் வளரும்.

பிறர்க்குப் பொருள் அளிப்பதிலும், நல்ல விஷயங்களைப் படிப்பதிலும், பூஜை தவம் செய்வது போன்ற வழிகளிலும் போதுமென்ற எண்ணம் இருக்கக்கூடாது.

நம்முடைய தகப்பனார், நம்முடைய குரு. நமக்கு உணவு அளிப்பவர், பயத்திலிருந்து நம்மை காப்பாற்றுபவர். வயதிலே மூத்தவர்களை தகப்பனாராக நினைக்க வேண்டும்.

நல்ல குணங்களினாலும் நன்னடத்தையினாலும் மனிதன் புகழப்படுகிறான்.

தரித்திரன், வியாதி உள்ளவன், பிறர் பொருளை அண்டி வாழ்பவன் எப்போதும் வருத்தப்பட்டு கொண்டே கவலைப்ட்டு கொண்டே இருப்பான்.

கடிகாரத்துக்குத் தேவையான அளவு சாவி கொடுக்க வேண்டும். அதுபோலக் கிடைத்த ஆகாரம் எல்லாம் உட்கொள்ளாமல் தேவையான வற்றைத் தேவையான நேரத்திலேயே உட்கொள்ள வேண்டும்.

இந்த மனம் புத்தி, உலகம் எல்லாவற்றிற்கும் காரணமாக இறைவன் ஒருவன் இருந்து ஆட்டி வைத்தக்கொண்டு இருக்கிறான் என்பதை நாம் உணர வேண்டும்.

மேகம் நகர்வது போல நம் மனமும் ஓரிடத்தில் அடங்காமல் சதா எண்ணிக் கொண்டே இருக்கும். ஓடிக் கொண்டே இருக்கும். மனதை ஒருநிலைப்படுதத் ஈசுவர பக்தி குரு பக்தி உதவுகிறது.

பிரியமில்லாமல் கொடுக்கும் தானம் பலனளிக்காது. தாளமில்லாமல் பாடும்பாட்டில் இனிமை இருக்காது. ராஜ்யம் இல்லாத அரசன் பிரயோஜனமற்றவன்.

ஆசையானது தெய்வ சிந்தனையை மறக்கடிக்கிறது. கோபமானது ஐஸ்வர்யத்தை போக்கடிக்கும். அகங்காரமானது எல்லாவற்றையும் போக்கடிக்கிறது.

சமுத்திரத்தில் வசிக்கும் திமிங்கலங்களே அதில் செல்லும் படகுகளை கவிழ்த்து விடும். இந்து மதத்தில் சில பேர் இருந்து கொண்டே ஹிந்து மதத்தையே அழிக்கப்பார்பார்கள்.

சமுத்திரத்தில் அலைகளை எத்தனை நேரம் வேண்டுமானாலும் பார்த்துக் கொண்டு இருக்கலாம். அலுப்புத் தட்டாது. இந்து சமயத்திற்கு ஆதாரமான இராமாயணம் மகாபாரதம் படிக்கப் படிக்க அலுப்புத்தட்டாது. ஒரு மனிதன் தனக்கு விதிக்கப்பட்ட நியதிப்படி நல்ல கர்மாக்கள் செய்யும்பொழுது அதன் மூலம் நல்ல ஸம்ஸகாரங்கள், நல்ல சிந்தனைகள் அடைகிறான்.

நல்ல சிந்தனை முயற்சி மூலம் மேலும் மேலும் நல்ல சித்த சுத்தி ஏற்பட்டுப் பகவானை வழிட்டு, அவர் அனுக்ரஹத்தால் ஞானம் எய்தி மோக்ஷத்தை அடைய முடியும்.

ஒரு பூமியில் பயிர் ஆக வேண்டுமென்றால் பூமிக்குத்தான் அதிக கஷ்டம் பொறுமை வேண்டும். பூமி ஸ்தானத்தில் உள்ள பெண் இனம் பொறுமையோடு சுக துக்கங்களைத் தாங்க வேண்டும்.

கடவுளை உருவம் அருவம் கிராமசக்தி போன்ற பல தன்மைகளில் வழிபடுவது பாரத தேசத்திற்கே உரித்தான ஒன்றாகும்.

உணவு உட்கொள்ளும் முறையில் பூமியில் உட்கார்ந்து இலையில் சாப்பிடுவது, சாத்வீகமான உணவுகளை உட்கொள்வது இந்து கலாச்சாரத்தின் தனிப்பெரும் விசேஷமாகும்.

பால் இனிப்பான வெல்லத்துடன் சேர்ந்து பொங்கி சர்க்கரை பொங்கலாவது போலத்தூய்மையான இனிப்பான சிந்தனைகளை வளர்ந்து ஆனந்த நிலை அடைய முயற்சிக்க வேண்டும்.

விடியற்காலை வேளையில் மனம் தெளிவாக இருக்கும்போது நல்லதை நினைத்தால் அது நிலைத்து நிற்கும். பள்ளி பாடங்களை படித்தால் நிலைத்து நிற்கும்.

எந்தவொரு கலாசாரத்திற்க்கும் மூலமானது ஹிந்து கலாசாரம். மார்கழி மாதம் புனிதமான மாதமாக இறைவனுக்கு உகந்த மாதமாக இறைவானாலேயே கூறப்பட்டு உள்ளது.

பெண் நல்லதை நிறையச் செய்தால், நல்ல ஆசீர்வாதத்தை நிறையப் பெற்றால் கணவன் குடும்பம் எல்லாரும் சுகமாக இருக்க முடியும்.

பெண்கள் கண்ணீர் விடுவது நாட்டிற்கு நல்லதல்ல, ஆகவே எந்த ஒரு காரியத்திலும் மனம் கலங்கும்படி வாழக் கூடாது. சமுதாயம் அப்படி வாழ விடவும் கூடாது.

நமக்கு வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மத்தை பலனில் ஆசை வைக்காமல் அப்பழுக்கின்றிப் புரிந்து அகம்பாவமின்றிப் பகவானுக்கு அர்ப்பணமாக்கி விட வேண்டும்.

எழுந்ததிலிருந்து படுக்கப் போகம் வரையில் நாம் செய்கிற பலவிதமான காரியங்களையும் இறைவனின் திசையில் திருப்புவோமாக.

மனிதன் மனிதனாக வாழ வேண்டும். இதன் உட்கருத்து என்னவென்றால் மனிதன் நல்லதையே செய்து பகவான் பக்தி சிந்தனைகளை வளர்த்து கொள்வது முக்கியம்.

இராமன், பகவான் அவதாரமாகவே இருந்தாலும் கூட மனிதனுடைய வாழ்க்கைக்குதான் எடுத்துக்காட்டாக வாழ்ந்து காட்டுகிறார்.

அரச மரத்தை இந்துக்கள் யாரும் பிரக்ஷணம் செய்யலாம். ஆண்கள் விபூதியும், பெண்கள் குங்குமமும் அணிந்து காலை எட்டு மணிக்குள் ஏழு பிரதக்ஷணிம் செய்யலாம்.

பிதுர் காரியங்களான தர்ப்பணம், ஸ்ராத்தம் போன்றவைகளை ஒரு போதும் விடக்கூடாது. அதற்கு எந்தப் பரிகாரமும் கிடையாது.

கண்டிப்பாகச் செய்ய வேண்டும். மாங்கல்ய நூல் ஒன்று பிரிந்தாலும், சனி, செவ்வாய், ராகு காலம், மரணயோகம் இல்லாத வேளையில் வேறு மாங்கல்யம் கட்டிக் கொள்ளலாம்.

நாம் தெய்வத்தின் பெயர்களை நம்குழந்தைகளுக்கு வைப்பதின் அர்த்தம் ராமனென்று ஒருவர் பெயர் இருந்தால் அந்த ராமனுக்கு தாஸனாக இருப்பது என்று பொருள்.

சிரத்தை உள்ளவர் ஆத்மசுத்தி சரீரசுத்தி என்ற இரு சக்கரங்களுள் வாழ்க்கை வண்டியை நடத்த வேண்டும். அன்னியர் உணவை ஏற்கக்கூடாது. சதிபதிகள் ஒழுங்காக வாழ்க்கை நடத்தினால் மறுபிறவியிலும் அவர்களே சதிபதிகளாவர்.

ஸ்ரீமத் பகவத் கீதை வாழ்க்கைக்கு மிக உன்னதமான வழிகாட்டி. பகவத் கீதையை தினந்தோறும் படிக்க வேண்டும். மனிதனை நிறை மனிதாக்குவது பகவத் கீதையின் கோட்பாடு.

ஸ்ரீஹனுமாருக்கு உகந்த தினம் வியாழன், சனிக்கிழமை. அவர் கோவிலுக்கு எந்த நாளும் சென்று வழிபடலாம்.

அடிப்பிரதக்ஷணத்தில் நிதானமாக, அவசரப்படாமல் ஒவ்வொரு அடியாக, நிறைமாத கர்ப்பிணி தலையில் நெய்க்குடத்துடன் செய்வது போல் செய்தால் விசேஷம்.

எவர்சில்வர் பாத்திரங்களில் அபிஷேகம் பண்றது தப்பு. பித்தளை அல்லது செம்பு பாத்திரத்தில்தான் வீட்டிலும் சரி கோவிலிலும் சரி அபிஷேகம் செய்ய வேண்டும்.

பிரதோஷ காலத்தில் மௌனமாக இருப்பது பூஜாகாலத்தில் மௌனமாக சிவத்தியானம் பண்ணுவது ரொம்ப விசேஷம். எல்லாரும் ஓம் சொல்லக்கூடாது. யார் உபதேசம் பெற்றுக் கொண்டிருக்கிறார்களோ அவர்கள்தான் சொல்ல வேண்டும்.

அம்பாளுக்குக் குங்குமம் விசேஷம், செம்பருத்தி பூ அரளி பவழமல்லிகை, மல்லிகை பூ தாமரை போன்ற மணமுள்ள மலர்களும் விசேஷமானது.

கோவிலிலும் சரி, வீட்டிலும் வழிபாட்டின் போது இடுப்பில் வேட்டிக்கு மேல் துண்டை கட்டிக்கொண்டு வழிபாடு செய்வது தமிழ் மரபு.

கோவில் முழுமையாக வலம் வந்த பிறகு கொடி மரத்தின் அருகே சாஷ்டாங்கமாக மும்முறை நமஸ்காரம் செய்ய வேண்டும்.

கலியுகத்தில் ஆண்டவன் நேரே காட்சி கொடுக்க மாட்டான். கோவிலில் சென்று பகவானைக் காணும் பொழுது ஆண்டவனை கண்ட உணர்வு ஏற்படுவதாலேயே காண முடியும்.

குரு வடிவத்தில் இருந்து காட்சி தருவது அபூர்வம். அனுபவத்தில்தான் இறையுணர்வை உணர வேண்டும். அவ்வப்போது ஆசைபடுவது தப்பல்ல. பேராசைப்படுவது மிக தப்பு. சாமான்ய ஆசைகளைத் தீர்த்துக் கொள்ளவும் பேராசை மனித வாழ்வையே அழித்து விடும்.

கோபுரம் என்பது ஆகம முறைப்படி பகவானின் திருவடி. அதனால் திருவடி தரிசனம் மிகவும் நல்லது என்று கோபுரதரிசனம் கோடிபுண்யம் என்று கூறியிருக்கிறார்கள்.

எல்லா வேதத்தின் சாரமாகப் பகவத் கீதை இருக்கிறது. நல்லமுறையில் அர்த்தத்தோடு தெரிந்துகொண்டாலே போதுமானது. பகவத் கீதையை அனைவரும் படிக்க வேண்டும்.

பஞ்சாங்கம் ஜோசியம் எல்லாம் பகல் நேரத்தில் பார்த்தால் விசேஷம். இரவு வேளையில் நட்சத்திரங்கள் இடங்களில் மாறுவதால் இரவு நேரத்தில் பார்க்கக்கூடாது.

நவக்கிரஹங்களுக்குத் தமிழ்நாட்டில் ஒவ்வொன்றுக்கும் ஒரு கோவில் இருக்கிறது. இதில் ராகக்ஷேத்திரம், காளஹஸ்தி காளஹஸ்தீஸ்வரரைப் பூஜை செய்தால் ராகுதோஷம் நிவர்த்தி ஆகும்.

ஒவ்வொரு தானியமும் இறைவனின் அருளால் படைக்கப்படுகிறது. ஐப்பசி மாதத்தில் மழை பொழிந்து சுபிட்சம் கிடைக்கும் நேரம். இறைவன் முன்பாகத் தானியத்தை சமர்ப்பிப்பது நிறைமதிக் காட்சி.

அன்புக்கும் அருளுக்கும் உள்ள வேறுபாடு, அன்பு மனிதன் மற்ற மனிதர்களிடம் காட்ட வேண்டியது ஒன்று. அருள் என்பது இறைவனால் அளிக்கப்படுகிறது.

பசு மாட்டையும், யானையையும் தெய்வமாக பூஜிக்க வேண்டும். குல தெய்வத்தை பூஜை செய்வது மனக்குறைகள் உடன் நீங்கும்.

அனைத்து மக்களும் அவ்வப்போது பொது இடத்தில் ஒன்றுகூடி வார வழிபாடு, பஜனை பாடல் பாடுவது, கோயில் தேர் இழுப்பது போன்ற பணிகளில் ஈடுபட்டால் தீமைகள் அகன்று ஒற்றுமை வலுவடையும்.

ஒவ்வொருவருடைய ஆன்மீக வாழ்க்கையிலும் குருவருள் ஆசி இன்றியமையாதது. முதலில் தெய்வத்தின் அருளால் குருவை பெற்று பிறகு குருவின் அருளால் தெய்வத்தன்மையை, ஞானத் தன்மையை அடைய வேண்டும்.

இறைவழிவாடு முதலியவைகளால் தீச்செயல்களின் விளைவு குறையும். ஆகவே இறைவழிபாடு மிக அவசியம்.

பூமியில் இருந்து கிளம்பிய துளியானது மேல் நோக்கித்தான் செல்லும். அதேபோல் இறைவனை அடைய திருவடியைப் பக்தி செய்தால் இறைவனுடைய துளிமகிமையால் வாழ்க்கை மேலே உயரும்.

விவேகம்தான் முதல்படி. விவேகத்தின் மூலம் தான் வைராக்கியம் பெற முடியும். அதுதான் நிலையாக இருக்கும்.

பசுவே புனிதமானது. அதனுடைய திருவடி பட்ட இடம் அதிலிருந்து கிளம்பும் துளி புனிதமானது.

பெரும் தீட்டு உள்ளவர்கள் வியாதியால் ஸ்நானம் செய்ய முடியாதவர்கள் கூட பசுவின் துளி பட்டால் மேலான பலனை அடைவார்கள்.

ஒரு மனிதன் சுகப்படுவதற்கும், துக்கப்படுவதற்கும் அவன் மனமே காரணம். நல்ல சிந்தனை உள்ளவர்களுக்கு நல்லவையும், தீய எண்ணம் கொண்டவர்களுக்கு தீமையும் கண்ணில்படும்.

எல்லாக் கல்வி நிலைகளிலும் பொது கல்வி அறிவோடு கூட இந்திய நாட்டிற்கு ஏற்றதான கலாசார கல்வி, தேசியக் கல்வி, தொழில் இயல் கல்வி சேர்த்தால் கல்வி முழுமை பெறும்.

கோபம், தாபம், விருப்பு வெறுப்பில்லாமல் எதையும் பகுத்தறிந்து, இது நிலையானது இது நிலையில்லாதது என்று உணர்ந்து இருப்பதே விவேகம்.

மயில்கள் தோகை விரித்து ஆட ஆரம்பித்தால் மழை வரும் என்பர். அதே போல மகான்கள் வசிக்கும் இடங்களில் சுபிட்சம் விளங்கும் அறியாமை அகன்ற பிறகு ஞானம் வருகிறது.

எப்போது பூர்ண நிலையை அடைகிறோமோ அப்போது அறியாமை நீங்கி ஞானம் தானாக பிரகாசிக்கின்றது.

எல்லா விதைகளும் மரமாவதில்லை. இறைவன் அருளால் வந்த நாம் எல்லாரும் முக்தி அடைவதில்லை. சிலரால்தான் அடைய முடிகிறது.

படகின் இயற்கை தண்ணீரில் மிதந்து எல்லாரையும் கரை சேர வைப்பது. அதுபோல நல்லார்கள் பெரியோர்கள் கடமை பிறரைத் துன்பத்தில் இருந்து கரைசேர வைப்பது.

பெரிதாக வளர்ந்த ஆல மர விழுதின் ஆரம்ப விழுது முடிவு விழுது எது என்று பிரித்து சொல்ல முடியாது. இந்த உலகில் ஆரம்பம் எது முடிவு எது என்று கூற முடியாது.

தேங்காயானது ஒரு உயர்ந்த பொருள். இறைவனுக்கே அர்ப்பணிக்கும் பொருள். ஆகவே அது உயர்ந்து மேலோங்கி இருக்கிறது. பாகற்காய் கசப்பாக இருந்தாலும் உடம்புக்கு நல்லது. அது போல பெரியார்களின் சொல் கேட்பதற்குக் கடினமாக இருந்தாலும் உள்ளத்திற்கு நன்மை தரும்.

சிறிய படகின் மூலம் கூடச் சமுத்திரத்திலே பல பணிகளைச் செய்து கொண்டு வந்து விடலாம். அது போல சிறிய முயற்சிகள் சாதனைகள் மூலமாக பல பலன்களைப் பெற்று இறைவனை அடையலாம்.

ஆலயம், மடம் இவைகள் நாட்டின் நன்மதிப்புக்கும் மக்களின் நல்வாழ்வுக்கும் சிறந்த சிந்தனையாளர்களால் தோற்றுவிக்கப்பட்டவை.

தினசரி அல்லது வாரத்தில் ஒரு நாளேனும் ஒவ்வொருவரும் பிரார்த்தனைக்கு செல்ல வேண்டும். கோயிலில் பூஜை நடைபெறாவிடில் நாட்டில் பஞ்சம் பசிப்பிணி பரவும். வானம் வழங்காது.

ஆலய சொத்தைப் பாதுகாக்க ஒவ்வொருவரும் முன்வர வேண்டும். நமக்கேன் என்று இருக்க கூடாது. சிவன் சொத்து குலநாசம் என்ற மொழியை மறக்கலாகாது.

நம்முடைய முன் செய்தவினைகளுக்கு ஏற்பபலனை அனுபவிக்க வேண்டி இருந்தாலும் இறைவன் அருளாலும் பெரியோர்கள் ஆசியாலும் துன்பம் குறைய வாய்ப்புண்டு.

மனதில் பகவானை நிறுத்தி வழிபடுவது தியானம். தியானத்தின் மூலமாகவும், மன பூஜையின் மூலமும், ஜபம் செய்வது மூலம் எனப்பல உபாசனை.

ஐந்து அறிவைக் காட்டிலும் ஆறாவது அறிவான பகுத்தறிவைக் கொண்டவன்தான் மனிதன். நல்லது, கெட்டது என்று பகுத்தறிந்து கொள்ள சக்தி பெற்ற மனிதன் ஒரு போதும் காலத்தை வீணடிக்கலாகாது.

பாரதம் என்ற பெயர் யுக யுகமாக நிலவி வருகிறது. பா– ரதம் என்ற இரு சொற்களாகப் பிரிப்பதால் ஆன்ம ஒளி ஊட்டுவது என்று பொருள்படும்.

தர்மமும் கர்மமும் ஒன்றுதான். ஆனால் தேசம், காலம் காரி இவைகளுக்கேற்ப வேறுபடுவதால் பலவிதமாக உள்ளன.

வேதங்களை ஒப்பு கொள்ளுதல், இறைவனது அருவநிலை உருவநிலை அவதாரம் இவைகளை ஏற்றுக் கொள்ளுதல் இந்து மக்கள் என்பதற்கான சின்னங்கள்.

இப்பிறப்பிற்கு முந்தைய மனுஷ்ய ஜன்மத்தில் செய்த பாவ புண்யங்களாலேயே இப்பிறப்பில் ஸுக துக்கங்கள் விளைகின்றன.

தனிநபர் தர்மம், குடும்ப தர்மம், தேச தர்மம் என மூன்று வகை. அதிலும் கூட பிரும்மசாரி கிருஹஸ்தன், வானப் பிரஸ்தன், ஸந்யாசி என பல தர்மங்கள் உள்ளனன.

இறைவழிபாடு முதலியவைகளால் தீச்செயல்கள் விளைவு குறையும். ஆகவே இறைவழிபாடு மிக மிக அவசியம்.

மழைக் காலத்தில் மழை கோட்டு போட்டுக் கொண்டு வெளியே சென்றால் நாம் நனைவதில்லை. அதுபோல இறை வழிபாடு தீய விளைவுகளின் துன்பத்தை தடுப்பதில் கவசமாக அமைகிறது.

உருவமும் குணமும் அற்ற சக்தியின் துணை கொண்டு உருவமும் குணமும் உடைய கடவுள் படைத்தல் காத்தல் அழித்தல் என்கின்ற தொழில்களைப் புரிகின்றார். வைகுண்டத்திலும், கைலாயத்திலும் இருக்கும் உருவமுடைய கடவுளே அவதாரம் எடுக்கின்றார்.

அவதாரங்களின் உருவங்களை கருங்கல்லில் சிலை வடித்தெடுத்து மந்த்ர பூர்வமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டு உள்ள சக்தியே விக்ரஹம் எனப்படும்.

பகவான் கூட தேவையான போது மந்திரம் தந்தரம் செய்பவர்கள். பகவானின் அருளால் சித்தி பெற்ற மாந்தர் கூட வித்தை செய்ய முடியும். அவர்களைச் சித்தர் எனலாமே தவிர பகவான் என்று கூற முடியாது.

பகவானைக் கண்ணாரக் காண முடியுமா என்றால் மனதைப் போகப் பொருளினின்றும் பொருள்களினின்றும் மீட்டுப் பகவானைத் தியானித்தால் கண்ணாரக் காண முடியும்.

பக்தி மார்க்கத்திலே பிரார்த்தனையைப் பற்றிச்சொல்லும் போது உங்கள் திருவடியிலே என் மனம் பதிய வேண்டுமென்று தான் சொல்லுவர்.

கோகுலத்தில் தோன்றி மதுரையில் வளர்ந்து துவாரகையில் வசித்த ஸ்ரீ கிருஷ்ண பகவான் திருவடி பதிந்த இடமெல்லாம் சங்கு சக்கரம் காணப்படுவதாக பாகவதம் கூறுகிறது.

ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையிலும் பிறப்பு முதல் இறப்பு வரையிலான எல்லா ஸம்ஸ்காரங்களும் அக்னிஸாக்ஷியாகவே செய்யப்படுகின்றன.

அக்னி ஸம்ஸ்காரத்தால் அனைத்துத் தேவர்களும் மகிழ்கிறார்கள். இதனால் மனிதனது வாழ்வில் குறைகள் களைந்து இன்பமயமாகத் திகழ்கிறது.

கடவுள் வழிபாடு ஒன்றுதான் மன வியாகூலங்களைத் தீர்க்க வல்லது. மன அமைதி கடவுளை வழிபட்டால் மட்டுமே கிடைக்கும்.

தோன்றிய பொருளுக்கெல்லாம் அழிவு உண்டு. அந்த நிலையிலே மனித உடல்நிலையானதில்லை. அதற்காக அழ வேண்டியதில்லை. ஆத்மா மட்டும் நிலையானது.

இந்த ஜீவாத்மாவானது பரமாத்மாவுடன் தொடர்பு கொள்வதற்கு ஒரு பெரிய உபாயமாக நாம பஜனை தொன்று தொட்டு நம் தேசத்தில் செய்யப்படுகிறது.

இந்த நாம பஜனை நல்ல பழக்கம். மீண்டும் நன்றாக உயிர் பெற்று வளர வேண்டும். பக்தி செழிக்கப் பகவத் குணங்களைப் பாடுவது சிறந்தது.

ஒவ்வொரு வீட்டிலும், குடும்பத்தில் உள்ள அனைவரும் மாலை வேளைகளில் வீட்டிலேயே குத்துவிளக்கு ஏற்றி 10 நிமிடமாவது பஜனை செய்ய வேண்டும். ஸத் என்றதை, சித் என்ற அறிவினால் கண்டு உண்டாவதே பரமானந்தம். துக்கப் கலப்பே இல்லாத ஆனந்தம்.

சகுண பிரமம் உபாஸனை செய்பவர்கள் இறந்த பிறகு பிரம்ம லோகத்திற்கு செல்கிறார்கள். அங்கேயே பிரம்ம ஞானம் பெற்று முக்தி அடைவர். பரமாத்மா மட்டுமே மெய்ப்பொருளாகும். அதைத் தவிர அனைத்து உலகமே பொய் பொருள்தான். அழியக் கூடியதுதான்.

வேதங்களிலும், உப நிடதங்களிலும் சாஸ்திரங்களிலும் பொதிந்து கிடக்கும் உண்மைகளை தத்துவங்க்ளை பரப்பி நமக்கு வழிகாட்டியவர் ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கராச்சாரியார் ஆவார்.

ஹிந்து தர்மத்தில் எல்லா நூல்களுக்கும் மதிப்பும் மரியாதையும் உண்டு. ஆனால் அனைத்திலும் எல்லாவற்றின் ஸாரமாகத் திகழ்வது பகவத் கீதை.

தேவதைகள் அனைவரையும் மதிக்கத்தான் வேண்டும். மரியாதையும் பக்தியும் செலுத்த வேண்டும். ஆனால் இஷ்ட தெய்வமாக ஒரு தேவதையை ஏற்றுக் கொள்வது அவசியம்.

பிறமத நூல்கள் ஒரு நபரால் எழுதப்பட்டது. காலகாலமாக உண்டு. ஆனால், ஹிந்து தர்ம மூல நூலோ ஒரு மஹானால் எழுதப்பட்டதன்று. அனாதி காலமாகக் குரு சிஷய் வழியாக வந்து கொண்டிருக்கிறது.

கிருத திரேதா துவாவர யுகங்களில் தவமிருந்து பெற்ற பலனை கலியுகத்தில் வெகு எளிதாக நாம பஜனை நாமஜபம் மூலம் பெறலாம். வெகு எளிதாக பெறலாம்.

உலகனைத்திற்கும் தாய் தந்தையாக விளங்குபவர்கள் பார்வதி பரமேச்வரர்கள். அநத் பார்வதிக்கு உகந்தது நவராத்திரி, சிவனுக்கு உகந்தது சிவராத்திரி.

ஏக சக்தி மூன்று விதமாகத் துர்கா லக்ஷ்மி ஸரஸ்வதி வடிவமாக நாம் எல்லோரும் பூஜை செய்வதைக் குறிக்கிறது நவராத்திரி.

கலியுகத்தில் மோசமான சூழ்நிலையிலும் சிறிது நேராமாவது எவனொருவன் நற்பணிகளைப் புரிகின்றானோ அவனுக்கு சிறப்பான விளைவு கிட்டும்.

பெரிய பாத்திரத்தில் உள்ள நீரில் ஒரு சொட்டு எண்ணை விழுந்தாலும் நீர் முழுவதும் பரவிவிடுவது போலக் கெட்ட சூழ்நிலையில் அறச் செயலும் அதிக சக்தி உடையதாகிறது.

பாலில் ஒரு துளி விஷம் விழுந்துவிட்டால் பால் முழுவதும் விஷமாகி விடுவது போலக் கலியுகத்தில் சிறிது பாவம் செய்தாலும் பெருந்துன்பம் விளையும். குணங்களற்றதும், உருவமற்றதும் தியான மயமானது ஜோதிமயமானது அகண்ட சச்சிதானந்தமான ஒரே ஸ்வரூபந்தான் பகவானது ஸ்வரூபம்.

கலியுகத்திற்கு முன்பு ரிஷிகளும் மஹான்களும் ஈசுவரனை மனதாலேயே தியானித்து வந்துள்ளனர். அவர்களுக்குக் கடவுள் காட்சி தந்த இடமே தற்போது வரலாற்றுத் தலங்கள்.

கடவுள் ஒருவரே, அவருக்கு உருவம் பெயர் கிடையாது. ஆனால் தனது பக்தர்களுக்கு நன்மை செய்து தீமைகளை நீக்கும் பொருட்டு உருவத்துடன் அவதரித்து உள்ளார்.

கலியுகத்தில் முன்யுகங்கள் போல் மனிதர்களுக்கு மனோபலம் கிடையாது. ஈசுவரனை வடிவமில்லாமல் தியானிக்கும் சக்தி இல்லை. அதனால் மனித மனம் இறைவன் பால் ஈடுபட ஸகுணமாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

பல வடிவங்க்ளில் தோற்றமளித்தாலும் நீரின் வடிவம் ஒன்றுதான். அதுபோல பரமாத்மா பல்வேறு உருவங்களில் காட்சிதந்தாலும் உண்மையில் ஒருவரே.

மதம் நீதி – தர்மம் இவைகளில் தான் மனிதனுடைய வாழ்வில் வரும் துன்பங்க்ளைக் குறித்து கொள்வதற்கும் அடியோடு ஒழித்து விடுவதற்கும் விளக்கப்பட்டு உள்ளன.

மனிதப் பிறவியில் இருந்து கொண்டே மனிதன் மேல் நோக்கிச் செல்வதையே தன் குறிக்கோளாக கொண்டு வாழ வேண்டும். இல்லை என்றால் அவன் மனித உருவிலிருந்தாலும் கூடப் பிராணிகள் நிலைக்கு இறங்கி விடுவான்.

விவேக சக்தி மனிதனைத் தவிர வேறு எந்த பிராணிக்கும் கிடையாது. ஆகவேதான் மற்றப்பிராணிகளைக் காட்டிலும் மனிதன் வேறுபட்டவனாக உயர்ந்தவனாக இருக்கிறான். மனிதனைத் தவிர மற்ற பிராணிகள் குறுக்கே வளர்கின்றன. மனிதன் ஒருவனே நீட்டுப் போக்கில் உயரமாக வளர்கிறான்.

யோசிக்காமலும், சிந்தனை செய்யாமலும் செய்வது துன்பத்திலேயே முடிகின்றன.

நம்பிக்கையும், விச்வாசமும் மனிதன் வாழ்வில் மேன்மையைத் தருகின்றன. இந்த அடிப்படையில் மானிடப் பிறவியில் நல்லதை செய்து கெட்டதைத் தவிர்த்து மேன்மையடைய வேண்டும்.

'ஆரிய' என்ற சொல்லுக்கு மரியாதைக் உகந்தவன் பூஜிக்கத் தகுந்தவன் என்று பொருள். ஆகவே ஹிந்து மதத்தைச் சேர்ந்தவன் யாராயிருந்தாலும், சிறப்பியல்பு காணப்படின் பூஜிக்க தகுந்தவன் ஆகிறான்.

பிரும்மதேவனுடைய படைப்பில் பதினான்கு உலகங்கள் உலகத்திற்குப் பூலோகம் என்று பெயர்.

பூலோகம் தவிர, மற்ற உலகங்களில் உள்ள எல்லோருமே மனிதர்களை காட்டிலும் அதிகமாகப் புண்ணியம் செய்தவர்கள்,

நாம் வசிக்கும் பரத கண்டமானது மேருபர்வதத்துக்கு தெற்குத் திக்கில் இருக்கிறது. சூரியனுக்கு அஸ்தமனம், உதயம் இல்லை.

சூரியன் மேருவை சுற்றி வருகிறான். இவன் ஒரு பாகத்தைச் சுற்றி வரும்போது அந்த பாகம் ஒளிவிட்டுப் பிரகாசமாகவும் அதற்கு நேர் பின்புறம் இருட்டாகவும் இருக்கிறது.

பரத கண்டத்தைத் தரம் பூமி என்றும் மற்ற கண்டங்களைப் 'போக பூமி' என்றும் கூறுவார்கள்.

சமுத்திரஸ்நானம் தினந்தோறும் செய்யக்கூடாது. பருவ காலங்களில் செய்ய வேண்டியது. ஆனால் ராமேசுவரம் போன்ற பெரிய க்ஷேத்திரங்களில் என்றைக்கும் ஸ்நானம் செய்யலாம்.

ஜபம் செய்யும் போது விரல் விட்டு எண்ணுவது அதமம். மாலைகளை வைத்துக் கொண்டு எண்ணிச் செய்வது மத்திமம். விரல்களின் பருவாக்களின் (கணுக்களில்) எண்ணுவது உத்தமம்.

இந்த சரீரமானது வியாதி வெக்கை இல்லாமல், துன்பப்படாமல் இருந்தால்தான் நமக்கு ஏற்பட்ட காரியங்களைத் தப்பு இல்லாமல் சரிவரச் செய்ய முடியும்.

மனம், சரீரம் இரண்டும் ஆரோக்யமாக சந்தோஷமாக இருக்க வேண்டியதற்கான உபாயங்களை ஏற்ற விரதங்களை, வேதத்தின் உபவேதமான ஆயுர்வேதம் தெரிவிக்கிறது.

ஆயுர்வேத மூலபுருஷர் தன்வந்தரி மஹரிஷி. மற்ற எந்த மருந்தாலும் வைத்யராலும் குணப்படுத்த முடியாத சில வியாதிகளை இந்த ஆயுர்வேதத்தால் குணப்படுத்த முடியும்.

வினை 3 வகைப்படும். 1. ஸஞ்சிதம், 2. ஆகாமி, 3. பிராரப்தம் நமது ஹிந்து சித்தாந்தம் அனாதியானது. பல பிறப்புக்களில் செய்துள்ள நல்வினை தீவினைகள் ஸஞ்சிதம் என்றழைக்கப்படுகிறது. ஸஞ்சிதத்திலிருந்து இப்போ அனுபவிப்பது பிராரப்தமாகும்.

இப்பிறப்பில் செய்யப் போகின்ற நல்வினை தீவினைகள் ஆகாமி எனப்படுகின்றது. காதிற்கு அலங்காரம் தீயதைக் கேட்காமல் நல்லதையே கேட்பது. நமக்குச் சத்ரு கோபம். ஒரு மனதின் புகழப்படுவது நல்ல குணங்களாலும், நன்னடத்தையாலும்.

ஆண்கள் சம்பாத்தியத்தைக் கொண்டு சிக்கனமான முறையில் தன்பரிபூரணமான சுதந்திரத்தை பயன்படுத்திப் பெண்கள் வாழ வேண்டும்.

தன் கணவனுக்கு அடுத்த மாதம் கடன் வராமல் குடும்பம் நடத்தும் பணியே பெரும்பணி. இதுவே பெண்கள் தன் குடும்பத்திற்கு தன்னை அர்ப்பணித்து கொள்ளும் முறை.

கண் இரண்டானாலும் பார்வை ஒன்றுதான். எதிலும் நல்லதைக் காண வேண்டும். தர்ம சிந்தனையும் பக்தியும் கொள்ள வேண்டும். அத்வைத வேதாந்தத்தின்படி முடிவான மெய்ப்பொருள் இரண்டல்லதான் ஒன்று என்பதும் வேற்றுமைகள் உண்மையல்ல என்பதுமேயாகும்.

இந்த அத்வைத கொள்கையே தேசிய ஒருமைப்பாடு என்று இப்போது கூறப்படும் விஷயத்திற்கு மிகவும் இணங்கியது. உலகத்தில் உள்ள மொழிகள் எல்லாம் அவைகளுக்குப் பொதுவான ஒரே மூலத்தில் இருந்துதான் தோன்றி உள்ளன.

நம்முடைய பேசும் மொழியை 'ஈஸவராம்சம்' என்று கருதுகிறோம். சரஸ்வதி, வாணி என்றும் வாக்தேவி என்றும் போற்றப்படுகிறார். ஏனைய மொழிகளும் சரஸ்வதியின் சொரூபங்களே. அப்படி இருக்க ஒரு மொழிக்கும் மற்றொரு மொழிக்கும் உயர்வு தாழ்வு என்கிற தார தம்மியம் இருக்க முடியாது.

'சப்த பிரம்மம்' என்ற பரம் பொருளே பல மொழிகளில் அவதரித்து இருக்கிறது. மொழி என்பது சிந்தனைக்கு ஒரு கருவிதான். பொதுவாக ஒரு உடல் அடுத்த உடலுக்கு உதவுவதாக இருந்தால்தான் நாம் எல்லோரும் பிழைக்க முடியும். அந்த மாதிரி சமூக சேவை தொடங்க வேண்டும்.

விபூதிக்கு ஐஸ்வர்யம் என்று பெயர். அம்மன் உருவகத்தை உண்டாக்குவது குங்குமம். குங்குமம், சந்தனம், திருமண் விபூதி இவைகைள இட்டுக் கொள்வது முறை. எந்த ஒரு பிரச்சினை வந்தாலும் மனசு ஒரு முக்கியமானதாகக் கருதப்படுகிறது. ஆகையால் மனசு நமக்குத் தூயதாக இருக்க வேண்டும்.

எப்படியாவது இறைவனிடம் நம் மனதைச் செலுத்த வேண்டும். பக்தி செய்ய வேண்டும். இல்லையேல் நமஸ்காரமாவது பண்ண வேண்டும். நமஸ்காரம் மிகவும் உயர்ந்தது. நம்முடைய குறைகள் பாவங்கள் தீர்ந்து இறைவன் அருளைப் பெறத்தான் நமஸ்காரம். இந்த முறையிலே வழிபாடு செய்தால் நமக்கு நல்லது கிடைக்கும்.

இறைவனைப் பக்தி செய்ய நம் மனம் இறைவனிடம் செல்லும். பிறகு படிப்படியாக உயரும். எல்லாருக்கும் வழிகாட்டியாக வாழ்ந்தால் நாமும் உயரலாம் நாடும் உயரும்.

கோயிலில் பூஜை நடப்பது தேசத்தின் நன்மைக்காக. கோவிலில் பூஜை நடந்தால்தான் நகரம் நன்றாக இருக்கும். கோவிலில் தீபம் எரியாவிட்டால் நாட்டில் ஒளி இருக்காது.

நெருப்பை தண்ணீரால் அணைத்தும் கூட சிறிது நேரம் வரை சுடும். புகையும் இருக்கும். அது போல இறைவன் அருளைப்

பெற சாதனை செய்பவர்களிடம் கூடச் சோதனையும் துன்பமும் கொஞ்சம் காலம் இருக்கத்தான் செய்யும்.

ஆயிரம் சூரியனும் ஆயிரம் சந்திரனும் ஏக காலத்தில் வந்தால் எவ்வளவு ஒளியும் எவ்வளவு குளிர்ச்சியும் இறைவனைக் கண்டவர்களிடம் இருக்கும்.

இறைவன் இல்லை என்று யாராலும் சொல்ல முடியாது. எங்கும் நிறைந்துள்ள இறைவன் சொல்பவனுடைய உள்ளத்திலும் சொல்லிலும் நிறைந்து இருக்கிறான்.

வேதம் ஸ்மிருதி புராணம் மூன்றும் நமக்கு வழிகாட்டிகள், வேதம் தகப்பனைப் போன்றது. தகப்பனார் கடுமையாக கட்டளை இடுவார். அதுபோல வேதம் 'உண்மை பேசு', தர்மத்தை செய், என்று கட்டளை இடும்.

ஸ்மிருதி தாயைப் போன்றது. ஸ்மிருதி இதை செய்தால் உனக்கு நன்மை உண்டாகும். செய்யாவிடிலும் உண்டாகும் என்று தாயைப் போல பக்குவமாக எடுத்துரைக்கும்.

புராணம் மனைவியைப் போன்றது. மனைவி கட்டளை இடவும் மாட்டாள். கட்டளை இடவும் கூடாது. இனிமையாகப் பேசியே நம்மை நல்வழிப்படுத்துவாள். புராணம் பல கதைகள் மூலம் தர்மத்தை நமக்கு எடுத்துக் கூறுகிறது.

படித்தவர்கள் சர்க்கார் உத்தியோகம் பார்க்க வேண்டும் என்று நினைக்காமல் தன்னிச்சையாக ஒரு தொழில் செய்ய முன் வர வேண்டும்.

தொகுப்பு : **புலவர் மகாதேவன்**



உ

பெரியவா துணை

# பெரியவா ஜாதகம்



மங்களகரமான ஜய வருடம் வைகாசி மாதம் 7ம் தேதி **(20.05.1894)** அனுராதா நட்சத்திரத்தில் சிம்ம லக்னத்தில் விருச்சிகராசியில் பகல் 1.18 க்கு பூலோக புவனாதிபதி யதிராஜ பிரத்யக்ஷ மஹா பரமேச்வரர் ஸ்ரீ மஹா பெரியவா வில்வபுரம் (எ) விழுப்புர க்ஷேத்திரத்தில் சுப்ரமண்ய சாஸ்திரிகள் மஹாலெக்ஷ்மி அம்மாள் தம்பதிகளுக்கு புதல்வராக அவதரித்தார்.

| | | | |
|---|---|---|---|
| சுக் ராகு | | சூரி புத குரு | |
| | இராசி | | |
| செவ் | | | ல |
| | சந் | | சனி கேது |

| | | | |
|---|---|---|---|
| சூரி | | கேது | குரு |
| செவ் புத | நவாம்சம் | | |
| சுக் | | | |
| | ல சந் ராகு | | சனி |

## பெரியவா தேவாரம்

துவராடை தனையுடுத்தி
சிகா வஸ்திரம் தரித்து
அகன்ற நெற்றியில் பால் வெண்ணீரும்
அவணியின் இருள் அகற்ற ஞான
ஒளி பரப்பும் த்ரி நேத்ரமும்
அபயம் வேண்டி வரும் பக்தாளை காக்கும் அபய ஹஸ்தமும்
தண்டம் ஏந்தி வரம் நல்கிடும் வரத ஹஸ்தமும்
திக்கெட்டும் திக் விஜ்யம் செய்த
பெரியவாளின் பொற்பாதங்கள்
பணிய மனித பிறவியும் வேண்டுவதே
இந்நாநிலத்தே